# கல்கி

KALKI 26.11.89
ரூ. 2.50









போஃபர்ஸ் ஊழல் அம்பலம்:
ராஜீவை வீழ்த்துமா?



"நான் மெச்சறது இவங்களோட ஸிக்னல் பல்-பலம்,
இவங்க மெச்சறதோ ஸிக்னல் ருசிமணம்!"











"ஸிக்னல் — பல் சிதைவை எதிர்த்து, என் குழந்தைகளோட பல்லுகளை வலுவா ஆரோக்கியமா வெச்சிருக்கு. டூத்பேஸ்ட்டோட அலாதியான சிகப்பு வரிகளே அடையாளம்: ஈடிணையில்லாத அந்த ஃப்ளூரைடு பாதுகாப்புக்கு.
பாருங்களேன், நான் ஞாபகப்படுத்தாமலே வேளாவேளை பல்தேய்க்க வராங்கன்னா அதுக்குக் காரணம்: ஸிக்னலோட வளப்பமான பெப்பர்மிண்ட் ருசிமணம் — குழந்தைகளுக்குக் கொள்ளை ஆசை!"

# இலவசம்

டூத்பிரஷ் : இவ்வித 200 கிராம் பேக் வாங்கும்போது.




## ஸிக்னல்
டூத்பேஸ்ட்

**ஆயுட்காலம் பற்களுக்கு பலம், ஆரோக்கிய நலம்.**

முந்துங்கள்! சரக்குகள் இருப்பிலுள்ள வரையே சலுகை. இச்சலுகை இல்லாமலேயும் வாங்கக் கிடைக்கிறது ஸிக்னல்.

LINTAS SGF 65 2213 TM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.




**ப**சி பட்டினி
பற்றிப் பிறகு பேசலாம்!
பேசலாம் வா, இப்போது
எந்தக் கட்சியோடு எந்தக் கட்சி
கூட்டு?

தண்ணீர் அரிசித் தட்டுப்பாடு
வழக்கமான பிரச்னைகள்
எப்போது வேண்டுமானாலும்
விவாதிக்கலாம்!
வா, பார்ப்போம்
வாக்குறுதிகள் எந்தக் கட்சித்
தேர்தல் அறிக்கையில் அதிகமாய்
வழிகிறது?

வேலையில்லாத் திண்டாட்டம்
விலைவாசி உயர்வு —
இவற்றையே
எண்ணிக் கொண்டிருந்தால்
வேட்பாளர் சின்னங்கள்
மறந்து போகும்.
ஏணியில் யார்? எருதில் யார்?
எலியில் யார்?

இனக் கலவரங்கள், கொலை கொள்ளைகள்

இந்த
அற்பக் கவலைகளில்
நேரத்தை
அவமானப்படுத்தினால்
புனித
ஜனநாயகக் கடமையில்
தவறி விடுவோம்...
ஆமாம்... இந்தத் தடவை
வோட்டுக்கு
எவ்வளவு தருவார்கள் உத்தேசமாக?

ஊழல் — லஞ்சம்
கலப்படம், கள்ள நோட்டு...
மகான்கள், மகரிஷிகள், வேதங்கள்
தோன்றிய நாட்டின்
மகத்துவத்தை — இந்தச்
சிறுமைகள் சிதைத்து விடுமா என்ன?
சொல்
இந்தப் பொழுதின் மேல்
எந்தச் சுவரொட்டி ஒட்டலாம்?

# தமிழகத்தில் மூன்று தடபுடல் தொகுதிகள்!



* காளிமுத்து: பரபரப்பான.....



* வை. கோபால்சாமி: .... போட்டி.

**சிவகாசி:**
**ஒரு பரபரப்பான போட்டி!**

'கருவாடு மீனாகாது; கருப்பட்டி பாகாகாது' என்று அரசியல் மேடைகளில் பேசிப் பேசியே பிரபலமானவர் காளிமுத்து. வை. கோபால்சாமி பாராளுமன்றத்தில் பேசிப் பேசிப் பிரபலமானவர். எனவே இவர்கள் போட்டியில் ஒரு பரபரப்பும் எதிர்பார்ப்பும் இருக்கிறது.

வை. கோபால்சாமிக்குத் தாம் கேட்ட தொகுதி தரப்படவில்லை என்பதில் வருத்தம்தான். ஆயினும் தி. மு. க. தொண்டர்கள் கொடுத்த உற்சாகம், அந்த வருத்தத்தைப் போக்கி விட்டதாகச் சொல்கிறார்கள். எந்தச் சுவரைக் கண்டாலும் அதில் உதய சூரியனைத்தான் பார்க்க முடிகிறது. வை. கோ. வின் வெற்றிக்காகப் பிற மாவட்டங்களிலிருந்தும் கூட தி. மு. க. வின் 'இளைஞர் படை' வந்து முகாமிட்டுக் கொண்டு வேலை செய்கிறது. கோவை ராமகிருஷ்ணா மில்ஸ் தொழிலாளர்கள் சுமார் இருபது பேர் 'வை. கோ. கலைக் குழு' என்று ஒரு வேனில் பானர் கட்டிக் கொண்டு கிராமம் கிராமமாகச் சென்று கும்மிப் பாட்டுப் பாடி வோட்டுச் சேகரித்துக் கொண்டிருக்கிறார்கள்!

வை. கோ. வும் பம்பரமாகத்தான் சுழல்கிறார். ஒரு நாளைக்கு இரண்டு மணி நேரம் மட்டுமே தூங்குகிறார். மற்ற நேரமெல்லாம் வோட்டு வேட்டைதான். அவரைச் சந்தித்த போது, "நிச்சயம் நாங்கள் சிவகாசியைக் கைப்பற்றியே தீருவோம். எனது பிரசாரம் மிகவும் கண்ணியமானது. யாரையும் தாக்கிப் பேசாமல், பாராளுமன்றத்தில் நான் இதுவரை எந்தெந்தப் பிரச்னைகளுக்காக வாதாடியிருக்கிறேன் என்பதையும், போஃபோர்ஸ் ஊழலையும்தான் சாதாரண மக்களுக்குப் புரியும்படி பிரசாரம் செய்து வருகிறேன்" என்றார்.

தி. மு. க. இத்தனை சுறுசுறுப்பாக இருக்கும் நேரத்தில், ஒன்றுபட்ட(!) அ. தி. மு. க. வின் ஆரம்பமே குளறுபடி! முதலில் சிவகாசித் தொகுதியின் அ. தி. மு. க. வேட்பாளராக இதே தொகுதியின் முன்



* கே. கே. எஸ். எஸ். ஆர்.: "ஒரு புடி புடிச்சிடுவோம்!"

* கோபால்சாமிக்காகத் தெருக்கூத்துப் பிரசாரம்.





ஆறுமுகம்:
''சமாதானமாகி விட்டோம்!''



தருமர்:
''கட்சிதான் முக்கியம்.''

னாள் சட்டமன்ற உறுப்பினர் பாலகிருஷ்ணன் பெயர்தான் அறிவிக்கப்பட்டது. உடனே அவரும் மிகுந்த உற்சாகத்தோடு தொண்டர்கள் சகிதம் சென்று வேட்பு மனுத் தாக்கலையும் செய்து விட்டார். ஆனால் அடுத்த சில மணி நேரத்திற்குள்ளாகவே, சிவகாசிக்குக் காளிமுத்துவின் பெயர் அறிவிக்கப்பட, பாலகிருஷ்ணன் கோஷ்டி திகைத்துப் போய் விட்டது. இந்த நிலையில் காளிமுத்து வேட்பு மனுவைத் தாக்கல் செய்த கையோடு இவர்களைச் சமாதானம் செய்யவே போதுமடா சாமி என்றாகி விட்டதாம்! இந்தவொரு காரணத்தாலேயே அ. தி. மு. க.வினர் சுவர்களில் அவ்வளவாக இடம் பிடிக்க முடியாமல் போய் விட்டதாகச் சொல்கிறார்கள்.

இம் மாதிரியான கோஷ்டிப் பிரச்னை தி.மு.க.— ஜனதா தளம் தொண்டர்களிடையிலும் உண்டு. உதாரணத்திற்கு விருதுநகர். அங்கு சென்ற சட்டமன்றத் தேர்தலில் தி.மு.க.— ஜனதா கூட்டணி போட்டியிட்ட போது, ஜனதா வேட்பாளராகப் போட்டியிட்ட எஸ். ஏ. ஆறுமுகத்திற்கு எதிராகத் தி.மு.க. வேலை பார்த்தது என்ற வருத்தம் இப்போதைய ஜனதா தளத் தொண்டர்களுக்கு இருக்கிறது.

இது குறித்து ஆறுமுகத்திடமே கேட்டோம். ''உண்மைதான். ஆயினும் இப்போது அனைவரும் சமாதானமாகி விட்டோம். காரணம், எங்கள் நோக்கம் ராஜீவ் காந்தியை வீட்டுக்கு அனுப்புவதுதான்.'' என்றார்.

இத்தொகுதியில் நாய்க்கர் வகுப்பாருக்கு அடுத்தபடியாக இருப்பது ஹரிஜன மக்கள். அவர்களின் வோட்டு அ. தி. மு. க. வுக்கே என்பதால், நாடார் சமூகத்தின் வோட்டுக்களைப் பிடிப்பதில் தி. மு. க. தீவிரமாக இருக்கிறது. கலைஞர் தமது மகள் கனிமொழியைத் திருமணம் செய்து தரப் போகும் சம்பந்தி வீடு நாடார் சமூகத்தினர் என்பதால், அவர்களின் உதவியை நாடியுள்ளார் கலைஞர் என்பது ஒரு செய்தி.

இது குறித்துக் கலைஞரின் வருங்காலச் சம்பந்தி வீட்டாருள் ஒருவரான டி. ஜி. தருமரிடம் பேசிய போது, ''உறவு வேறு; அரசியல் வேறு. இரண்டையும் குழப்பாதீர்கள். நான் ஒரு காங்கிரஸ்காரன். எங்கள் நோக்கம் ராஜீவ் பிரதமராவதுதான். எங்களுக்கு முதலில் கட்சிதான். உறவுக்காகக் கொள்கையை விட்டுக் கொடுக்க மாட்டோம்'' என்றார்.

சிவகாசிப் பாராளுமன்றத் தொகுதியில் அடங்கியுள்ள ஆறு சட்டமன்றத் தொகுதிகளில் விருதுநகர், கோவில்பட்டி தவிர மற்ற நான்கும் தி. மு. க.வின் வசமே உள்ளது. என்றாலும் தி. மு. க. தொண்டர்கள் அ. தி. மு. க.வினர் போல் மெத்தனம் காட்டாமல் பிரசாரத்தில் ஈடுபட்டிருப்பது ஆச்சரியமான விஷயம்.

**அ.** தி. மு. க.வின் மெத்தனத்திற்கு என்ன காரணம்? ''காளிமுத்து சரியாகச் செலவு செய்ய மாட்டார். எல்லாவற்றையும் 'கடைசி நேரத்தில் பார்த்துக் கொள்ளலாம்' என்று கூறுகிறார். இப்படியே இருந்தால் சென்ற சட்டமன்றத் தேர்தலில் தோல்வியைத் தழுவியது போல், இப்போதும் தோல்வியடைய வேண்டியதுதான்...'' என்று நிஜமான வருத்தத்தோடு கூறினார் அ. தி. மு. க. பிரமுகர் ஒருவர்.

கே. கே. எஸ். எஸ். ஆர். ராமச்சந்திரனிடம்கூட சுறுசுறுப்பைக் காண முடியவில்லை. காரணத்தை அவரிடமே கேட்டோம். ''இப்ப ஆடறவனெல்லாம் ஆடட்டும். கடைசி நேரத்துல ஒரு புடி புடிச்சிடலாம்.''

''அப்படிக் கடைசி நேரத்தில என்ன செய்யப் போறீங்க? பணம் கிணம் கொடுக்கப் போறீங்களா என்ன?''

''பாராளுமன்றத் தேர்தல்ல அதெல்லாம் முடியாது. வேற திட்டம் இருக்கு. முழு மூச்சா இறங்கியாச்சுன்னா வெற்றி நமக்குத்தான்.'' என்றார் அட்டகாசச் சிரிப்போடு.

இத் தேர்தலில் தாமரைக் கனி புறக்கணிக்கப்படுவதால், நாடார் சமூக வோட்டு கணிசமாக அ. தி. மு. க.வுக்குக் குறையும் என்கிறார்கள் சிலர். கே. கே. எஸ். எஸ். ஆருக்கும் நாடார் சமூகத்திற்கும் ஆகாது என்பது இன்னொரு மைனஸ் பாயிண்ட். விருதுநகரைப் பொறுத்தவரை கே.கே.எஸ்.எஸ். ஆர். வந்து வோட்டுக் கேட்காமல் இருப்பதே அ. தி. மு. க. வுக்கு உத்தமம் என்றும் சிலர் கூறுகிறார்கள்.

இரண்டு புறங்களிலுமே, கட்சிக் கொள்கைகள், வேட்பாளர்களின் திறமைகள் ஆகியவற்றை மட்டுமே பிரசாரம் செய்து வோட்டுக் கேட்கப்படவில்லை. கட்சிக் கொடிகள் கட்டப்படாத கார்கள் சில ஜாதி ரீதியாகவும் வோட்டுச் சேகரித்துக் கொண்டுதான் உள்ளன.

இவையெல்லாம் ஒருபுறமிருக்க படிப்பறிவில்லாத கிராமத்து ஜனங்களிடம் ''இரட்டை இலை'' என்கிற அந்த மந்திரச் சின்னம், எம். ஜி. ஆரின் மறைவுக்குப் பிறகும் பசுமையாக இருக்கிறது என்பது அதிசயமான விஷயம். அதனாலேயே போட்டி கடுமையாகிறது!



* மனோகரன்: "வெற்றி எங்களுக்கே."



* சிதம்பரம்: திருப்தியுமில்லை; அதிருப்தியுமில்லை!



* கணேசன்: எளிமையான வேட்பாளர்.

## சிவகங்கை: ப. சிதம்பரத்தின் பிளஸ் பாயிண்ட்!

வேட்பு மனு தாக்கல் செய்வதற்கான கடைசி நாள். எந்தவிதமான ஆர்ப்பாட்டமும் இல்லாமல், மிக எளிமையாக வந்து தமது வேட்பு மனுவைத் தாக்கல் செய்துவிட்டுச் செல்கிறார் ஓர் இளைஞர்.

அவர்தான், சிவகங்கைத் தொகுதியில் ப. சிதம்பரத்தை எதிர்த்து தி. மு. க. சார்பில் போட்டியிடும் கணேசன். இளைஞராக இருந்தாலும் நல்ல பேச்சாளர், திறமைசாலி என்ற பெயர் இவருக்கு உண்டு. இவற்றோடு சிவகங்கைத் தொகுதியில் பெரும்பாலோராக உள்ள முக்குலத்தோர் பிரிவைச் சேர்ந்தவர் என்பதாலும் கணேசன் சுலபமாக வெற்றி பெற்று விடுவார் என்று சொல்லப்படுகிறது.

ஆனால், காரைக்குடி நகர ஜனதா தளத் தலைவர் ஆர். எம். கே. இராமநாதனைச் சந்தித்துப் பேசிய போது, "கணேசன் நல்ல திறமையான இளைஞர்தான். தமிழிலும் ஆங்கிலத்திலும் தெளிவாகப் பேசக் கூடிய அறிவாளிதான். இருப்பினும் சிதம்பரத்தோடு மோதுவதற்கு இவர் போதுமானவரா என்பது கேள்விக்குறிதான்" என்றார்.

"அப்படி நினைக்கவே தேவையில்லை. பெருந்தலைவர் காமராஜரை ஒரு சாதாரண மாணவராக இருந்த சீனிவாசன் ஜெயித்துக் காட்டவில்லையா? அது மாதிரி இப்போதும் கணேசன் ஜெயித்துக் காட்டுவார். அதற்கான பணபலம் இல்லாவிட்டாலும் எங்களிடம் படைபலம் இருக்கிறது..." என்று அடித்துச் சொன்னார், சிவகங்கைச் சட்டமன்ற உறுப்பினர் பா. மனோகரன்.

சிவகங்கையில் உலவும் ஒரு கிசுகிசு: மூப்பனார் ஆட்சிக் கவிழ்ப்புக்கு எதிரானவர். சிதம்பரம் மூப்பனார் ஆதரவாளர். அதனால், ப. சிதம்பரத்தைத் தி. மு. க. முழு மூச்சோடு எதிர்க்க விரும்பாமல் சும்மாவாச்சும் ஒரு டம்மி வேட்பாளரை நிறுத்தியிருக்கிறது!

"இது சுத்தப் பொய். தி. மு. க. தொண்டர்களைத் திசை திருப்புவதற்காகச் செய்யப்படும் சூழ்ச்சிகளில் இதுவும் ஒன்று..." என்று அழுத்தம் திருத்தமாக மறுக்கிறார் தி. மு. க. பிரசாரத்திற்குச் சிவகங்கை வந்துள்ள பழ. கருப்பையா.

காங்கிரஸின் நிலை என்ன? ப. சிதம்பரத்தை எதிர்த்து அவரது கட்சிக்காரரேயான கௌரி சங்கர் என்பவரும் வேட்பு மனு தாக்கல் செய்ய, பிறகு ஒரு வழியாகப் பஞ்சாயத்துப் பேசி அவரைச் சரிக்கட்ட வேண்டியதாயிற்று.

இத்தொகுதியிலுள்ள இரண்டு பஞ்சாலைகள், சக்தி சர்க்கரை ஆலை, காதி கிராமத் தொழில் மையம் மற்றும் கம்பன் எக்ஸ்பிரஸ் ரயில், எல்லாமே தமது சாதனைகள் என்பதாகச் சொல்லி வோட்டுக் கேட்கிறார் சிதம்பரம்.

காங்கிரஸ் படு சுறுசுறுப்பாக வேலை செய்கிறது. தெருவுக்குத் தெரு பந்தல், பானர்கள், போஸ்டர்கள் என்று ஜமாய்க்



* ஆர். எம். கே. ராமநாதன்: "சரியான போட்டி தானா?"



* பழ. கருப்பையா: "சூழ்ச்சிகள் நடக்கின்றன."

# சுவைத்து மகிழ்ந்து வளர்ச்சி அடைந்திடும் வழி-∴பாரெக்ஸ்®

| குழந்தையின் உயரம் மற்றும்* எடையை சோதித்திடுங்கள் | ஆண் குழந்தை | | பெண் குழந்தை | |
|---|---|---|---|---|
| | எடை (கிலோ) | உயரம் (செ.மீ.) | எடை (கிலோ) | உயரம் (செ.மீ.) |
| *3* மாதம் | 5.2 | 59.1 | 4.9 | 58.4 |
| *6* மாதம் | 6.7 | 64.7 | 6.1 | 63.7 |
| *9* மாதம் | 7.3 | 68.2 | 6.9 | 67.0 |
| *12* மாதம் | 8.4 | 73.9 | 7.8 | 72.5 |

* இது, இந்தியக் குழந்தை மருத்துவ ஆராய்ச்சிக் கழகத்தால் வழங்கப்பட்டது.

இது, இந்தியக் குழந்தைகளுக்கு மட்டுமே சராசரியாகும். குழந்தையின் வளர்ச்சி உங்கள் டாக்டரின் திருப்திக்கேற்ற வகையில் இருந்தால் போதும்.




உங்கள் குழந்தை பரிபூரண அபிவிருத்தியும் வளர்ச்சியும் அடைந்திட போஷாக்கு நிறைந்த ∴பாரெக்ஸ் அளியுங்கள்

**∴பாரெக்ஸ்®**

**சுவைத்து மகிழ்ந்து வளர்ச்சி அடைந்திடும் வழி**

கிறார்கள். எங்கு பார்த்தாலும் கைச்சின்னம், கார்கள் மயம். 'வெற்றி நமதே' என்று ஓர் ஆடியோ கேசட், சிதம்பரத்தின் புகழைப் பாடல்களாகத் தெருத் தெருவாக ஒலித்துக் கொண்டிருக்கிறது. திறந்த ஜீப்பில் நின்று கொண்டு வோட்டுக் கேட்கிறார் சிதம்பரம்.

காங்கிரஸின் கூட்டணிக் கட்சியான அ.தி.மு.க. வினர் சிலர் சிதம்பரத்திற்கு எதிராக வேலை செய்கிறார்கள் என்றும் சொல்லப்படுகிறது. இந்த நிலையிலும் சிதம்பரத்திற்குத் தொகுதியிலுள்ள பிளஸ் பாயிண்ட், அவரைப் பற்றி யாருக்கும் ஓகோ வென்று நல்ல அபிப்பிராயம் இல்லா விட்டாலும்கூட யாருக்கும் அவர் மீது மோசமான அபிப்பிராயம் இல்லை என்பதுதான்.

## சென்னை:
## மூன்றில் இரண்டு நிச்சயம்!

சென்னை நகரில் சகட்டுமேனிக்குச் சுயேச்சைகள் போட்டியிட்டாலும், ஸாரி, நோ சான்ஸ். தி.மு.க. வின் மூன்று வேட்பாளர்களில் என். வி. என். சோமு (வட சென்னை) டாக்டர் கலாநிதி (மத்திய சென்னை) பற்றிப் பிரச்னை இல்லை. வெற்றி உறுதி. ஆனால் தென் சென்னையில் ஆலடி அருணா கொஞ்சம் எதிர்ப்புகளை — தி.மு.க. வுக்குள்ளேயே சமாளிக்க வேண்டியுள்ளது.

வைஜயந்திமாலா போன தடவை போல, ஃப்ளைட் லைட் போட்டுக் கொண்டு, ஊரெல்லாம் பிரகாசமான பிரசாரம் பண்ணவில்லை. ஆலடி அருணா கொஞ்சம் சீரியஸாய் வேலை பார்க்கிறார்.

"தி.மு.க. தனியாய் வேட்பாளரை நிறுத்தாமல், ஏ. பி. வெங்கடேசுவரனுக்கு ஆதரவு தந்திருக்க வேண்டும்," என்றார் ஒரு தென் சென்னைவாசி.

வெங்கடேசுவரனும், ராதாகிருஷ்ணனும் வைஜயந்திமாலாவுக்கு விழக் கூடிய படித்த

* ஆலடி அருணா



* வைஜயந்திமாலா



பிராமணர்களின் வோட்டுக்களைப் பிரித்து விடுவார்கள்," என்று தி. மு. க. தலைமை எதிர்பார்ப்பதாகத் தெரிகிறது.

தி.மு.க. தொண்டர்கள் சிலரிடம் பேசிய போது, கட்சி அளவில் ஆலடி அருணா மீது ஒருவித வெறுப்பு உணர்வு இருப்பது தெரிய வந்தது. ஆனாலும் அது தி. மு. க. வுக்குக் கிடைக்கக்கூடிய வோட்டு எண்ணிக்கையைப் பாதிக்காது என்றே சொல்லலாம்.

மத்திய சென்னையைக் கை கழுவி விட்ட காங்கிரஸுக்குத் 'தென் சென்னை கிடைக்கும்' என்கிற நம்பிக்கை இருக்கிறது. ஆயினும் 18 — 21 வயதுக்குட்பட்ட புதியவர்களை, வாக்காளர் பட்டியலில் சேர்க்கிற பணியில், மற்றவர்களை விட தி. மு. க. வினர்தான் சுறுசுறுப்பாய்ச் செயல்பட்டனர் என்பதை ஒரு தி. மு. க. பிரமுகர் நினைவுபடுத்தி, "எப்படியும் சென்னையின் மூன்று தொகுதிகளும் தி. மு. க. வுக்குத்தான்" என்று அழுத்தமாய்ச் சொன்னார்.

மூன்று தொகுதிகளிலும் ரவுண்டு அடித்துப் பலதரப்பட்ட மக்களிடமும் பேசிய நமக்கு, 'இரண்டு நிச்சயம்; மூன்றாவது முயற்சி எடுத்தால் சாத்தியம்' என்று தோன்றியது.

— நமது நிருபர்கள்.

படங்கள்: சுபா.



"பெட்ரோல் விலை என்னாச்சு...?"

"ரொம்ப ஏறிப் போச்சுங்க...!"

"பஸ் கட்டணம்...?"

"உயர்ந்து போச்சுங்க...!"

"காய்கறி விலை...?"

"அநியாய விலைங்க...!"

"இவ்வளவு விஷயம் தெரிஞ்சிருந்தும், ஒரு வோட்டுக்கு அதே நூறு ரூபாய் தர்றீங்களே, இது உங்களுக்கே நியாயமாப் படுதா?"

— சண்பை. சிவ. சண்முகம்.



''கண்ணே... வானவில் வேண்டுமா? பிடித்துத் தருகிறேன்... முத்தும் பவழமும் கடலில் மூழ்கி எடுத்துத் தருகிறேன்.. ஆனால் கண்டல் மட்டும் கேட்டு விடாதே. மாதக் கடைசி... ஏற்கெனவே அந்தப் பையனுக்கு இரண்டு மாத கண்டல் பணம் பாக்கி...!''



''அந்த ஹோட்டல் வாசல்ல என்ன கூச்சல்...?''

''காசில்லாமல் சாப்பிட்டு விட்டு மாவாட்டுவோர் சங்கமாம்... அந்த ஹோட்டல்ல கிரைண்டர் வாங்கினதை எதிர்த்துப் போராடறாங்களாம்...!''



''நாலு இட்லிதான் தின்றேன்... அதுக்கே வயிற்று வலி டாக்டர்...!''

''அப்படியா...? ஆச்சரியமா இருக்கே...!''

''எல்லாம் அந்த சர்வரோட வயிற்றெரிச்சல்தான் காரணம். 'நாலு இட்லிக்கு ரெண்டு வாளி சாம்பாரா'னு முணகினான்...!''

— ஏ. ஆர். விரராகவன்.



''மக்கள் இப்ப ரொம்ப விவரமா இருக்காங்க!''

''எப்படிச் சொல்றீங்க?''

''பொதுக் கூட்டத்துக்கு வண்டி, லாரியில எல்லாம் வர மாட்டாங்களாம். ஏ. சி. பஸ் வேணுமாம்!''

— எஸ். முகம்மது யூசுப்.



சர்வர்: ஏன் சார்
ஆர்டர் கொடுக்கும் போது
இப்படி
பயந்து பயந்து சொல்றீங்க?

கஸ்டமர்: பழக்க
தோஷம்பா...
வீட்லே இருக்கிற
மாதிரியே நினைச்சுட்டேன்...!

— அ. தெய்வசிகாமணி.

# போஃபர்ஸ் ஊழல் அம்பலம்: ராஜீவை வீழ்த்துமா?



"பெரிது பெரிதாய் டாக்குமெண்ட் பிரதிகளைப் போட்டு, பக்கம் பக்கமாய் போஃபோர்ஸ் பற்றி எழுதுகிறீர்கள். ஆரம்பத்திலிருந்து இப்போது வரை என்ன நடந்தது என்று தொடர்புபடுத்திச் சுருக்க மாகச் சொல்லுங்களேன்..." என்று 'ஹிந்து' என். ராமிடம் கேட்டோம்.

"நான் ஐந்து கட்டங்களாகப் பிரித்துச் சொல்லு கிறேன்..." என்று சொல்ல ஆரம்பித்தார் ராம்:

முதல் கட்டம் 1987 ஏப்ரல் 16 — ஆம் தேதி ஆரம்பிக்கிறது. அன்றுதான் ஸ்வீடிஷ் தேசிய வானொலியின் செய்திப் பிரிவு, ஆயுத விற்பனையில் இந்திய உயர்மட்ட அரசியல்வாதிகளுக்கும், அதிகாரிகளுக்கும் போஃபோர்ஸ் நிறுவனம் லஞ்சம் கொடுத்த தாக, முதன் முதலாக அறிவித்தது. 32 மிலி யன் ஸ்வீடிஷ் க்ரோனர்கள் கொடுக்கப் பட்டது என்றார்கள். (சுமார் ஏழு கோடி ரூபாய்) உண்மையில், தரப்பட்டது இதைப் போல் பத்து மடங்கு என்பது பின்னால் தெரிய வந்தது. ஆயுத விற்பனை ஒப்பந் தத்தைப் பெறவே இந்தத் தொகை கொடுக் கப்பட்டதாக வானொலி தெரிவித்தது. ஆனால் இந்திய அரசு,' உண்மையைக் கண்டுபிடிக்க முனையாமல், 'இது விஷமத் தனமானது!' என்றது. அதை நம்ப மறுத் தது. ஆனால் செய்தியாளர்கள் மொசாண் டரும், ரெண்டாலும் தங்களிடம் ஆதாரம் இருப்பதாக அடித்துச் சொன்னதால், வேறு வழியின்றி இந்திய அரசு உண்மையைக் கண்டுபிடிக்கும்படி ஸ்வீடிஷ் அரசைக் 'கேட் டுக் கொண்டது. பாதுகாப்புத் 'துறை அமைச்சராக இருந்த அருண்சிங் கௌரவ மானவர். ராஜீவ் காந்தியின் அரசு விதித்த நிபந்தனைகளுக்கு உட்பட்டு, சில தகவல் களைச் சேகரிக்க அவர் முற்பட்டார்.

ஜூன் 87 ல், ஸ்வீடிஷ் நேஷனல் ஆடிட் பீரோ, அறிக்கை ஒன்று தயார் செய்து அந் நாட்டு அரசிடம் கொடுத்தது. ரிக்ஸ் பங்க்கன் (நமது ரிசர்வ் வங்கி மாதிரி) வங்கி ஆவணங் கள் எல்லாம் அவர்களுக்குக் கிடைத்தது. போஃபோர்ஸ் நிறுவனம் ஒத்துழைக்க மறுத் தாலும், ஆடிட் பீரோ அக்கறையுடன் தன் பணியைச் செய்தது.

கொடுக்கப்பட்டது பணி முடிப்புத் தொகையல்ல — கமிஷன்தான் என்றும், போஃபோர்ஸின் இந்திய ஏஜெண்டாகப் பணி புரிந்து வந்த வின்சத்தாவுக்கும், ஸ்வென்ஸ்கா நிறுவனத்துக்கும் தொடர்பு உண்டு என்றும் சொல்லியது. ஆனால் இந்தப் பகுதிகளை எல்லாம் ஸ்வீடிஷ் அரசு வெட்டிவிட்டு, வங்கி ரகசியக் காப்பு விதி களின் மீது பழியைப் போட்டு, அரைகுறை அறிக்கையை இந்திய அரசுக்குச் சாதக மாகத் தந்தது.

ஆனாலும் ஸ்வீடிஷ் போலீஸ் சும்மா யிருக்கவில்லை. நகர பிராசிக்யூடர் லார்ஸ் ரிங்பெர்க்கின் ஆணைப்படி வேகமாக விசா ரணை செய்யத் துவங்கியது.

இங்கே அருண்சிங்கின் ஆலோசனை யின் பேரில், பாதுகாப்புத் துறைக் கூடுதல் செயலர் வோரா, போஃபோர்ஸ் அதிகாரி களை இங்கே வரச் சொல்லி, 'முழு விவரங் களையும் சொல்லிவிடுங்கள்' என்று கேட்டுக் கொண்டார். மாஸ்கோ பயணம் முடிந்து திரும்பி வந்தாரோ இல்லையோ, ராஜீவ் காந்தி, 'அவர்கள் எல்லாம் ஒன்றும் இங்கே

* உண்மைகளைத் திசை திருப்புவதற்கென்றே நாடாளுமன்றக் கூட்டுக் குழு!



வரத் தேவையில்லை' என்று அவர்கள் வருகையையே ரத்து செய்துவிட்டார். அருண் சிங் முயற்சி வெற்றி பெறவில்லை!

இரண்டாவது கட்டம், ஜூலை 87 ல் 3 அல்லது 4 ஆம் தேதி ஆரம்பமாகியது. அருண்சிங் பின்னர் பதவி விலகி அரசிலிருந்தே வெளியேறி விட்டார். ஆக, ஒரு பெரிய ஆபத்து தவிர்க்கப்பட்டது!

ஏப்ரல் 88 ல் 'ஹிந்து' சில முக்கிய ஆவணங்களை வெளியிட்டது:

ஒப்பந்தத்தில் உள்ள சதவிகிதம்; அது கமிஷன்தான் என்ற ஆதாரம்; கமிஷனுக்கான தனிக் குறியீடு; இவை கொடுக்கப்பட தனி ஒப்பந்தம் எல்லாம் அதில் வெளியாயின. பணிமுடிப்புத் தொகை என்று செப்டம்பர் — அக்டோபர் 87 ல் போஃபோர்ஸ் சரடுவிட்ட கதை சின்னாபின்னமாயிற்று.

ஸ்வீடிஷ் அரசும், இந்திய அரசும் விஷயத்தைத் திசைதிருப்பத் திட்டமிட வேண்டி வந்தது. இந்தியாவில் நாடாளுமன்ற கூட்டுக் குழு அமைக்கப்பட்டது. ஸ்வீடிஷ் பிராசிக்யூடரும், போலீசும் தீவிர விசாரணையைத் தொடர்ந்தும், ஸ்வீடிஷ் அரசு சும்மாவே இருந்தது. ஸ்வீடிஷ் போலீஸ், ஆர்ட்போ டயரி, மற்றும் வங்கி ஆவணங்களை எல்லாம் கைப்பற்றியது.

செப்டம்பர் 87 ல் இந்திய அரசிடம், மொரெஸ்கோ நிறுவனம் ஸ்விட்சர்லாந்தில் பதிவு செய்யப்பட்ட கம்பெனி என்று ஸ்வீடிஷ் அரசு அதிகார பூர்வமாக அறிவித்தது. முன்னால் எல்லாம் இதை 'பிட்கோ' என்றார்கள். 1979 ல் செய்து கொண்ட ஒப்பந்தப்படி, பிட்கோவுக்கு 8 முதல் 10 சதவிகிதம் கமிஷன் கொடுக்க வேண்டியிருந்தது என்றார்கள், இதை 84 ல் மொரெஸ்கோவுக்கு மாற்றினார்கள்! பணம் மொத்தமும் மொரெஸ்கோவுக்குப் போயிற்று. இந்த விவரம், 87—ல் செப்டம்பர் 15, 16, 18 தேதிகளில் பட்நாகர் — அரோரா — வோரா குழுவுடன் போஃபோர்ஸ் குழு சந்தித்த போது வெளியிடப்பட்டது. ஆனால் வெளிப்படையாக, பிட்கோ, மொரெஸ்கோ என்பதெல்லாம் ஸ்விஸ்ஸில் பதிவு செய்யப்பட்ட கம்பெனிகள் என்று அறிவிக்கவே பயப்பட்டார்கள். அதனால் மொய்னோ என்று ஒரு புதிய கம்பெனி பெயரை இடையே நுழைத்தார்கள். அதிலும் MOINEAO என்று குறிப்பிட்டிருந்த கம்பெனியைப் பற்றி விசாரிக்கச் சொன்ன போது ஸி. பி. ஐ தலைவர் கத்ரே, MOINAU என்ற கம்பெனியைப்பற்றி விசாரித்ததாகச் சொல்லிவிட்டு, அதற்கும் போஃபோர்ஸுக்கும் சம்பந்தமே இல்லை என்று திசை திருப்பப் பார்த்தார். இந்தத் தில்லுமுல்லை நான் எடுத்துக்காட்டிய போது, கத்ரே, 'இது தவறுதான்' என்று, என்னிடம் ஒப்புக்கொண்டார்!

மூன்றாவது கட்டம் அக்டோபர் 87 ல் ஆரம்பமாகிறது; ஏப்ரல் 88 வரை போகிறது. முதல் கட்டத்தில் இருந்த நிலைக்கும், இப்போதுள்ள நிலைக்கும் நிறைய வித்தியாசங்கள் இருப்பதை ஸ்வீடிஷ் ஆடிட் பீரோ உணர்ந்தது. தங்கள் அறிக்கையிலிருந்து கிட்டத்தட்ட பத்து பாராக்கள் நீக்கப்பட்டிருப்பதை அறிந்து கொண்டது. இந்திய அரசு, ஸி. பி. ஐ, ஜே. பி. ஸி. எடுத்த நிலைக்கும், ஸ்வீடிஷ் போலீசும் ஆடிட் பீரோவும் கண்டறிந்த நிலைக்கும் நிறைய வேறுபாடுகள்! இதுதான் மூடி மறைக்கும் வேலை.

ஸ்வீடிஷ் பிரதமர் கார்ல்சன், 'லஞ்சம் கொடுக்கப்பட்டது கான்ட்ராக்டைப் பெற அல்ல' என்று பாராளுமன்றத்தில் பொய் சொன்னார். பார்லிமெண்ட் உறுப்பினர்கள் கோரியும், ஆடிட் பீரோ, அறிக்கையை வெளியிட மறுத்தார்.

ஸ்வீடிஷ் ஆடிட் பீரோவுக்குக் கிடைத்த அத்தனை தகவல்களையும் எப்படியோ சேகரித்து, சித்ரா சுப்பிரமணியம் ஜெனிவாவிலிருந்து தெரிவித்தார். சீக்கிரமே, சிறு சிறு துண்டுகள், குறிப்புகள்

* போஃபர்ஸ் என்பதே மோசடிக்கு மாற்றுப் பெயர் ஆகி விட்டது!



என்று இது சம்பந்தமாக ஆடிட் பீரோவில் என்னவெல்லாம் இருந்தனவோ அவற்றை எல்லாம் ஸ்வீடிஷ் அரசு வந்து வாரிக் கொண்டு போய்விட்டது. அவர்களுக்குப் பயம். குட்டு வெளிப்பட்டுவிடுமோ என்று கவலை.

ஸ்வீடிஷ் ஆடிட் பீரோ சேகரித்தவைகளை விட, ஸ்வீடிஷ் போலீசிடம் நிறையத் தடயங்கள் சிக்கியிருந்தன. வெகு நேர்த்தியான அறிக்கையை அவர்கள் தயாரித்திருந்தார்கள். இதைப் படித்துப் பார்த்தவர்களும் உண்டு!

**நா**லாவது கட்டத்தில், பத்திரிகைகள் கை ஓங்கியிருந்தது. ஏப்ரல் 1988—இல் இது ஆரம்பமாகிறது. அப்போதுதான் நமது நாடாளுமன்றக் கூட்டுக்குழு அறிக்கை வெளியாகியது. அதற்கு முன்னால் ஹிந்து ஆவணங்களை வெளியிட்டது. மழுப்பல் அறிக்கை தயாரித்தவர்களும் இந்திய அரசின் அதிகார பீடத்தில் இருந்தவர்களும் அதிர்ந்து போனார்கள்.

ஏப்ரல் 88 — இல் ஐந்து ஆவணங்கள் வெளியாயின. பிட்கோவுக்கும், மொரெஸ்கோவுக்கும் உள்ள தொடர்பை எடுத்துக் காட்டின. பிட்கோவுக்கும் 'மேற்பார்வை: சங்கம் லிமிடெட்' என்றிருந்த ஹிந்துஜாவுக்கும் தொடர்பு இருந்ததை உறுதிப்படுத்தின. அவர்கள் மறுத்தார்கள். ஆனால் மறுபடி நாங்கள் ஜூன் 88 — இல் அவை உண்மையான ஆவணங்கள் என்று நிரூபித்த போது, இந்திய அரசு விசாரிக்க ஆரம்பித்தது. இவை எல்லாமே ஸ்வீடிஷ் போலீஸ் கைப்பற்றிய ஆவணங்கள், ஆர்ட்போ டயரி உட்பட.

எக்ஸ்ளோம் டயரி என்றும் ஒன்று இருக்கிறது தெரியுமா? இதுவரை நான் யாரிடமும் சொன்னதில்லை. இப்போது சொல்கிறேன்! ஏன் டயரி எழுதுகிறார்கள் இவர்கள்? தாங்கள் பிறகு அரசியல்வாதிகளிடம் மாட்டிக் கொண்டு விழிக்காமல் இருக்கத்தான் ...!

ஸ்வீடனில் தங்கள் கௌரவம் பாழாகி விட்டதாக உணர்ந்த சிலர், தார்மிகக் கோபம் கொண்டு எழுந்ததும், இன்னும் சில உண்மைகள் கசியத் தொடங்கின. இந்தத் தார்மிகக் கோபம்தான் இந்திய மக்களுக்கு உண்மைகளை உணர்த்த உதவியுள்ளது. ஏனெனில் ஸ்வீடனில் லஞ்சம் கொடுப்பது குற்றமல்ல. ஸ்வீடிஷ்காரர்கள் வாங்கிக் கொண்டால்தான் குற்றம். ஸ்வீடிஷ் அல்லாதவர் வாங்கிக் கொண்டால் அதைக் குற்றம் என்று வழக்குப் போட முடியாது!



* வின் சத்தா

போஃபர்ஸ் ஊழலில் சம்பந்தப்பட்டவர்களுக்கு இது எவ்வளவு சாதகமான நிலை பாருங்கள்!

**ஐ**ந்தாவது கட்ட ஆரம்பத்தில் மேலும் புதிய ஆவணங்கள் புயலாக வெளிவந்து தாக்கின. போஃபோர்சுக்கும், பணம் பெறும் நபர்களுக்கும் இடையேயான ஒப்பந்தங்கள், பணம் கொடுக்கப்பட்ட ஆவணங்கள், கடிதங்கள், டெலக்ஸ் செய்திகள் என்று வெளியாயின. ஸ்வீடிஷ் ஆடிட் பீரோ அறிக்கையில் மறைக்கப்பட்ட பகுதியைக்கூட 'ஹிந்து'வில் வெளியிட்டோம். ஸ்வீடனில் பார்லிமென்டரி கமிட்டிக்குக்கூட இது கிடைக்கவில்லை. இந்திய அரசுக்குக் கிடைக்கவில்லை. ஆனால் ஹிந்து பத்திரிகைப் பணி காரணமாக இந்திய மக்களுக்குக் கிடைத்தது!

பாவம் வின்சத்தா! அவர் செய்த வேலைக்கு ஆறுசதம் கமிஷன் கிடைக்கிறது. அதிலும் புகுந்து ஐம்பது சதவீதத்துக்கு மேல் மறித்துத் தங்கள் பாக்கெட்டில் போட்டுக் கொண்டுவிட்டார்கள் 'சிலர்.'

ஆர்ட்போ என்ற மனிதருக்கு நடந்தவை எல்லாமே தெரியும். நிறையவே தெரியும். இந்திய அரசாங்கத்தின் மீதும், குறிப்பாக பிரதமர் ராஜீவ் மீதும் இவர் வைத்திருந்த 'பிடிப்பு' அசாத்தியமானது. எத்தகைய பரிதாபகரமான, ஆபத்தான, நிலைமைக்குப் போய்விட்டது நம் தேசம்! மார்ச் 87 லேயே கம்பெனி நிர்வாகத்திலிருந்து வெளியேறி விட்ட ஓர் அதிகாரிக்கு என்ன சக்தி பாருங்கள்! ஜனவரி 87 லேயே ஆபத்தில் தாம் மாட்டிக்கொண்டிருப்பதாக டயரியில் எழுதியிருக்கிறார் அவர். 'நான் முழு உண்மையையும் எங்கே வெளிப்படுத்திவிடுவேனோ என்று எல்லோரும் பயந்து கொண்டிருக்கிறார்கள்' என்று எழுதியிருக்கிறார்!

'முழு உண்மையையும் நாங்கள் வெளியிட்டால் உங்கள் அரசு கவிழ்ந்து விடும்' என்று ஹிந்துஜாக்கள் தெரிவித்தார்கள். அவர்கள் பேசிய 'டேப்பை வேண்டுமானால் போட்டுக் காண்பிக்கிறேன்!' நடந்ததை எல்லாம் ஒப்புக் கொள்கிறோம். ஆனால் 'தேசிய நலன்' கருதி அவற்றை வெளியிட முடியாதே!' என்கிறார்கள். எப்படி இருக்கிறது கதை! அவர்கள்தான் ஸ்வீடிஷ் பிரதமர் கார்ல்சனை நான் பேட்டி காண ஏற்பாடு செய்தார்கள். பேட்டியின் பிரதி ஒன்று கேட்டார்கள். 'உங்கள் உதவிக்கு நன்றி. ஆனால் தர இயலாது' என்று மறுத்து விட்டேன். ஆனால் ஹிந்துஜாக்களுக்கு அதன் பிரதி கிடைத்து விட்டது! கார்ல்சன் மூலம் இந்தியப் பிரதமர் வழியாக அதைப் பெற்றுக் கொண்டார்கள் என்று எனக்குத் தெரிய வந்தது.

பாப் வில்சன் என்று இன்னொரு சக்தி வாய்ந்த பேர்வழி. இவர் ஏ. இ. சர்வீசஸ் லிமிடெட்டோடு தொடர்புள்ளவர். 'P—க்கும் R—க்கும் இடையே நடந்த சமாசாரங்களை நான் சரிப்படுத்திக் கொள்கிறேன்' என்று

## 'சிச்சிமா'

"சித்ராவின் பணி மகத்தானது" என்று கூறுகிறார் இந்து இணை ஆசிரியர் ராம். "தனியாக இருந்து பல ஆவணங்களைத் தேடித் தேடி எடுத்துக் கொண்டு வந்தார். முக்கிய புலனாய்வு செய்தவர் அவர்தான். இடைவிடாது உழைத்தார். எங்கேயிருந்து எல்லாம் தகவல்கள் கிடைக்குமோ, அவர்களிடம் முழு நம்பிக்கையைப் பெற்றார். அதனால்தான் அவருக்குக் கிடைத்தது. எல்லா ஆவணங்களும், தகவல்களும் இலவசமாகவே கிடைத்தன. சில நாடுகளில் பணம் கொடுத்து விஷயத்தை வாங்கிக் கொள்ளலாம். நாங்கள் அப்படிச் செய்யவில்லை. அப்படிப் பெறுவது நம்பகமானதுதானா என்று எப்படி அறிவது?"

பெங்களூரில் வசிக்கும் சித்ராவின் அம்மா ஜானகி சுப்பிரமணியம் மகளைப் பற்றிக் கூறுகிறார்: "சித்ராவுக்கு ரொம்பத் துணிச்சல். குழந்தை நிலில் பிறந்த மூன்றாம் நாளே, ஒரு முக்கிய டாக்குமென்ட்டுக்காக இரவில் தனியே காரை ஓட்டிக் கொண்டு போய் வந்தாள்!

"ஏழைகள் கஷ்டப்படுவது காணப் பொறுக்க மாட்டாள். அவர்களுக்கு வலியச் சென்று உதவுவாள். இந்தியாவில் மூன்று குழந்தைகளுக்கு, தலா ஆயிரம் ரூபாய் வீதம் இப்போதும் உதவி வருகிறாள்.

"கலை ஆர்வம் நிறையவே உண்டு. தையல், கோலம், நடனம் எல்லாவற்றிலும் முழு ஈடுபாடு உள்ளவள். கர்நாடக இசையில் தேர்ச்சி உண்டு. நான் பாடிய சில பாடல்களுக்கு மெட்டமைத்திருக்கிறாள் சித்ரா.

"'ஹிந்து'வில் சேர்வதற்கு முன் 'இந்தியன் எக்ஸ்பிரஸி'லும், 'இந்தியா டுடே'யிலும் பணிபுரிந்திருக்கிறாள். சென்னை டி.வி.யில் செய்தித் தொகுப்பாளராக இருந்திருக்கிறாள். டில்லி லேடி ஸ்ரீராம் கல்லூரி ஆங்கில ஆனர்ஸ் மாணவி. அமெரிக்க ஸ்டான்ஃபோர்டு பல்கலைக் கழகத்தில் பத்திரிகைத் துறைப் பட்டம் வாங்கியவள்.

"டில்லியில் தென்னிந்திய வைதிக முறைப்படி சித்ராவுக்குத் திருமணம் நடந்தது. கணவர் கார்லோஸ் டூயெல்லா ஸ்விஸ் – இதாலியர். ஜெனிவாவில் டிஜிடால் நிறுவனத்தில் அதிகாரி.

"தெய்வ பக்தி நிறைய. தேவி பக்தை; எப்போதும் வாய் 'பவானி த்வம் தாஸே' சுலோகத்தை முணுமுணுத்துக் கொண்டே இருக்கும்.

"'ரொம்பவும் டமாரம் அடித்து விடாதே!' என்று போனில் எனக்கு உபதேசம்! அடக்கம் பிடிக்கும்; விளம்பரம் பிடிக்காது.

"சித்ராவுக்கு வீட்டில் செல்லப் பெயர் 'சிச்சிமா'!"


• சித்ரா சுப்பிரமணியம்

சொல்லியிருக்கிறார் இவர். முன்னவர் பால்மே என்றும், பின்னவர் ராஜீவ் என்றும் புரிந்து கொள்ள அதிகம் சிரமப்படவே வேண்டாம். அதேபோல, ஆர்ட்போ குறிப்பிடும் இன்னொரு நபர் Q – எனப்படும் க்வெட்ரோச்சி – ராஜீவ் குடும்பத்துக்கு நெருங்கிய இத்தாலிய நண்பர்.

புத்திசாலிகள் இதை எல்லாம் புரிந்து கொள்ளுவார்கள். நான் ஒரு துணுக்குக் கூடச் சேர்க்கவில்லை. ஜோஸ்யம் செய்யவில்லை. எனக்குத் தெரியாததை ஊகித்துப் புகுத்தவில்லை. இட்டுக்கட்டிச் செய்தியைப் பெரிதாக்கவில்லை. உள்ளது உள்ளபடி, அறிந்தது அறிந்தபடி கொடுத்திருக்கிறேன். இத்தனை தூரம் விஷயத்தைக் கொண்டு வந்திருக்கிறோம்!

ஸ்விஸ் அதிகாரிகள் சித்ரா சுப்ரமணியத்திடம் சொன்னார்கள்: "பிலிப்பைன்ஸ் அதிபர் மார்க்கோஸ் விஷயத்தைப் பார்க்க, இரான் – கேட் விஷயத்தைப் பார்க்க இந்த ஆவணங்கள் ஏராளம். ஒவ்வொரு கட்டத்திலும் அரசின் பொய் நிரூபிக்கப்பட்டிருக்கிறது." என்று.

நிக்சன் எதற்கு ராஜினாமா செய்தார்? சட்டத்தை மீறிச் செயல்பட்டதைவிட, பொய் சொன்னதற்குத்தானே? அடுத்தடுத்து ஜப்பானியப் பிரதமர்களும், நேர்முக உதவியாளரும் கூட, ஏன் ராஜினாமா செய்ய வேண்டும்? கூட்டுச் சதி நடந்தது. அது அம்பலமாகி விட்டது என்று தெரிந்ததும் ராஜினாமா செய்தார்கள். நாம் வெளியிட்டுள்ளது போன்ற ஆவணங்கள் எந்த நாகரிக நாட்டுக்கும் போதும் சம்பந்தப்பட்டவர்கள் ராஜினாமா செய்ய. ஆனால் இந்தியாவில் தான் இவை போதவில்லை! மக்களை ஏமாற்றிப் பதவியில் ஒட்டிக் கொள்ள நினைக்கிறார்கள். மக்களை அவ்வளவு கேவலமாக எண்ணுகிறார்கள்.

அங்கேயும் பல பத்திரிகைகள் இவற்றை எல்லாம் வெளியிட்டிருக்கின்றன. 'டாகன்ஸ் நைகட்டர்' என்ற, பெரிதும் மதிக்கப்படும் பத்திரிகை வெளியிட்டிருக்கிறது. இதே ஆவணங்களுடன். காந்தி டிரஸ்ட் விஷயம் உட்படப் பிரசுரித்திருக்கிறது. நம் நாட்டு நிலைமையைப்பார்த்து அவர்கள் கேலியாகச் சிரிக்கிறார்கள்!

தொகுப்பு: **சாருகேசி**

அட்டையிலுள்ள என். ராம் வண்ணப்படம்: **ரவிசங்கரன்.**


எதிர்ப்பு அலை
கை சின்னத்தில் வாக்களியுங்கள்


நாம் நினைத்தால் கருணாநிதி ஆட்சியை அகற்றுவோம்!


நாம் நினைத்தால் ராஜீவ் ஆட்சியை அகற்றுவோம்!..
மக்கள்


சாமீ.. தேர்தலில் வெற்றி பெற உன்னைத் தான் நம்பி இருக்கிறோம்!
ஜாதி, மத வெறியுணர்வுகள்
பாரதீய ஜனதா




கல்கி

1989 நவம்பர் 26
மலர் 48 இதழ் 17
சுக்ல கார்த்திகை 11




# வாக்காளரின் முதல் கடமை!

கல்கி தலையங்கத்தைக் கொளுத்தி, சாம்பலைத் தாளில் மடித்து நமக்கு அனுப்பியிருக்கிறார், பெயர், விலாசம் எழுதத் துணியாத ஒருவர். கசப்பான உண்மைகளைச் சந்திக்கத் திராணியில்லாத போது, கோபம் வருவது இயற்கை. இவர்கள் ஒன்றை யோசிக்கட்டும். இப்படிப் பலரது கோபத்தைச் சம்பாதித்துக் கொண்டு, வாசகர்களை இழக்க நேரிட்டாலும் பரவாயில்லை என்ற தியாக உணர்வுடன் கல்கி தன் கடமையைச் செய்கிறது என்பதை எண்ணிப் பார்க்கட்டும். இதை மறக்காமலிருந்தால், கல்கி நாட்டு நலனையே நாடுகிறது என்பதைப் புரிந்து கொள்வது எளிதாகி விடும்.

ஓர் ஆட்சி நல்ல ஆட்சியாக இருந்து வந்தாலும்கூட, ஒரு மாற்றம் அவசியம் என்பதற்காகவே, தேர்தலில் எதிர்க்கட்சிக்கு வாய்ப்பளிப்பது நல்லது. இது ஜனநாயக உணர்வு, தத்துவம். ஆனால், இங்கோ இ. காங்கிரஸ் நீண்ட காலமாக ஆட்சியில் இருந்து வருவது மட்டுமல்ல, அப்படி நிலைத்து இருப்பதன் காரணமாகவே துணிந்து பல தில்லுமுல்லுகளில் ஈடுபட்டு, நாட்டு நலனைக் கவனியாமல் சுயநலனுக்கே முதலிடம் தருவதாக ஆகிவிட்டது. ஆகாயத்தைப் பார்த்தால் ஹெலிகாப்டர் ஊழல், பூமியைப் பார்த்தால் போஃபர்ஸ் ஊழல், கடலைப் பார்த்தால் நீர்மூழ்கி பேர ஊழல், பூமிக்கடியில் பார்த்தால் கூட பைப்லைன் ஊழல்! இத்தகைய லஞ்ச ஊழல் மயமான ஆட்சியைப் பதவியிலிருந்து இறக்குவது மக்களின் தலையாய கடமையாகும்.

லஞ்ச ஊழலைச் சகித்துக் கொள்வது எனில், ராஜீவ் காந்திக்கு வேறு அம்சங்களில் அசாதாரணத் திறமையாவது இருக்க வேண்டும். ஆனால் அவரிடம் அதுவும் இல்லை.

பஞ்சாப் பிரச்னையில் லோங்கோவால் ஒப்பந்தத்தை அவரால் நிறைவேற்ற முடியவில்லை. இந்திரா காந்தி மரணத்தையடுத்து தில்லியில் சீக்கியர்கள் பலரைக் கொன்று குவித்தவர்களை, வாக்களித்தபடி கண்டுபிடித்துத் தண்டிக்க அவரால் இயலவில்லை. பஞ்சாப் பிரச்னை நாளொரு பயங்கரமும், பொழுதொரு படுகொலையுமாக வளர்ந்து வருகிறது.

விலைவாசி உயர்வு, வேலையில்லாத் திண்டாட்டம் பற்றிச் சொல்லவே வேண்டாம். நாள்தோறும் ஒவ்வொரு குடும்பமும் அனுபவித்து வரும் துயரங்கள்.

கட்சிக்குள் ஜனநாயகம் இல்லை. மாறாகத் தலைக்குத் தலை நாட்டாண்மை. அதனால் வளரும் உட்கட்சிப் பூசல். லேட்டஸ்ட்: கே. ஸி. பந்த். பிரதமரைச் சுற்றியுள்ள சில முகஸ்துதி மன்னர்கள், ஆமாம்சாமிகள் அவரைத் தவறான திசையில் அழைத்துப் போகிறார்கள். இன்று எதிர்க்கட்சியில் உள்ள பல தலைவர்களும் முன்பு காங்கிரஸில் இருந்தவர்கள்தாம். இவர்கள் சுயநலமிகளாக இருந்திருப்பின், காங்கிரஸிலேயே நீடித்திருப்பார்கள். வெளியேறச் செய்தது தேச பக்தியே.

இலங்கைப் பிரச்னையிலும் ராஜீவ் அடைந்திருப்பது படுதோல்வியே. விடுதலைப் புலிகள் இலங்கை அரசுடன் கொஞ்சிக் குலவ, அமைதிப் படை அவமானப்பட்டுத் திரும்புகிறது.

ட. வி., ரேடியோவை ஏதோ காங்கிரஸ் கட்சியின் சொந்தச் சொத்துப்போல் பிரதமர் பயன்படுத்துவது, மக்களின் வெறுப்பையே சம்பாதித்துத் தந்திருக்கிறது.

எதிர்க்கட்சித் தலைவர் வி. பி. சிங் மீது சேறு பூச நடந்த சூழ்ச்சி, கடைசியில் ராஜீவ் தமக்குத் தாமே தார் பூசிக் கொண்டதாகிவிட்டது! அஜெய்சிங், ஸெயிண்ட் கிட் நிதி நிறுவனத்தில் பணம் ஏதும் போடவில்லை என்று அந்த நிறுவன ஆடிட்டரே கூறிவிட்டார். குற்றம் சாட்டப்பட்டதுபோல் அப்படிக் கோடிக்கணக்கில் பணம் போட்டிருந்தால் அந்த நிறுவனத்தை இழுத்து மூடவே நேர்ந்திருக்காது!

காங்கிரஸின் பண பலமும் தேர்தல் சமயத்தில் அதனை வெள்ளமாக அது ஓட விடுவதும் மக்களிடம் வெறுப்பையே தோற்றுவித்திருக்கிறது. காங்கிரஸ் கட்சிக்குள்ளேயே பணப் பட்டுவாடாவில் வீதிச் சண்டையே நடக்கிறது!

'எதிர்க்கட்சியில் எல்லாரும் யோக்கியர்களா?' என்றால், கறைபட்ட கரங்கள் சில இருக்கலாம். அவர்களில் மக்களின் தண்டனையை ஏற்று, மன்னிக்கப்பட்டுத் திரும்பவும் தலைமையைப் பிடித்திருப்பவர்களும் உண்டு. ஆனால் முக்கியமானவர்கள் — தில்லியில் ஆட்சி அமைக்கக் கூடியவர்களான வி. பி. சிங், சந்திரசேகர், அஜீத் சிங், அவர்களுக்கு ஆதரவு தரக்கூடிய பி. ஜே. பி. தலைவர்கள் ஆகியோர் மீது எந்த விதமான ஊழல் குற்றச்சாட்டும் இல்லை. சரி, இவர்களில் யார் தலைவர்? என்று கேட்டால் ஜனநாயக மரபுப்படி அவர், நாடாளுமன்றக் கட்சி உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்படுவார் என்பதே சிறந்த பதில்.

இந்திய வாக்காளர்கள் படிப்பறிவு அதிகமில்லாவிட்டாலும் புத்திசாலிகள் என்று கடந்த காலச் சரித்திரத்தின் அடிப்படையில் உலகம் அவர்களை எடை போட்டிருக்கிறது. இந்தக் கணிப்பு சரியா, தவறா என்பதைத் தேர்தல் முடிவுகள் உணர்த்தும்.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.




## வட்டமேஜை

# "அமேதி தொகுதிக்கு அனுப்ப வேண்டும்..!"

* ஒரு பக்கம் தாத்தா நேருவின் நூற்றாண்டை நினைவுபடுத்தும் வகையில் அவரின் புகைப்படங்கள், மறுபக்கம் பேரன் ராஜீவின் நிலை குறித்துத் தலையங்கம். இரண்டையும் ஒப்பிட்டுப் பார்த்தேன். வேதனைதான் மிச்சம்.

நெல்லிக்குப்பம். தமிழ்ப்பரிதி.

* 12.11.89 ஆம் தேதி கல்கி தலையங்கத்தை ஹிந்தியில் மொழி பெயர்த்து அமேதித் தொகுதி வாக்காளர்களுக்கு அனுப்பினால் சாலச் சிறந்த உதவியாகும்.

மதுரை — 10. சே. லெட்சுமணன்.

* இந்த வாரக் கல்கி இதழின் தலையங்கம் கண்டேன். மெய் மறந்தேன். நடுநிலை என்பது என்ன? என்பதற்கு நன்றாக விளக்கம் தந்துள்ளீர்கள். தங்களுடைய பணி மேன்மேலும் சிறக்க வாழ்த்துக்கள்.

காரைக்குறிச்சி. வே. கட்டைக் குண்டன்.

* காந்திஜி, ராஜாஜியின் பேரனும் நல்லறிஞரும் சிந்தனையாளரும் உழைப்பாளியுமான ராஜ் மோகன் காந்திக்கு இணையாக உறை போடக் காண முடியாதவர் ராஜீவ் மட்டுமல்ல தேசிய முன்னணித் தலைவர்களும்தான். குற்றம் சாட்டப்பட்ட ராஜீவ் இலாமை கண்டிக்கத்தக்கது. அதே நேரத்தில் மோசடி காந்தி எனக் கல்கி எழுதியதைக் கண்டு முப்பது ஆண்டுக் கால வாசகன் என்ற முறையில் வியந்து போகிறேன்; வியர்த்துப் போகிறேன்.

தஞ்சாவூர். கவிஞர். தியாக ஜோதி ராமலிங்கம்.

* ஜவாஹர்லால் நேருவின் நூற்றாண்டு விழாவைக் கொண்டாடும் இவ்வேளையில் நேருஜிக்கு மிகவும் பிடித்தமான (குழந்தைகளை) சிறுவர்களை நேருவைப் போல் உடை அலங்காரம் செய்து அட்டைப்படமாகவும், நேருவைப் பற்றிய அரிய செய்திகளைப் புகைப் படங்களின் வாயிலாகவும் வெளியிட்டமைக்கு நன்றி.

சென்னை — 23. எஸ். ராஜா.

* 'உங்களில் யார் கண்ணன்?' என்னும் கருத்துமிக்க கவிதை அருமை. அதற்கேற்றாற் போல் பொருத்தமான அட்டைப் படம் அருமையோ அருமை!

தர்மபுரி — 2. வித்யா.

* கட்டெரிக்கும் வார்த்தைகளைக் கோவையாகத் தொடுத்து, மழலையர்களை மட்டுமின்றி, இளைஞர்களுக்கும் ஏன், பெரியவர்களுக்கும் உரைக்கும்படி, 'உங்களில் யார் கண்ணன்? கவிதையைப் படைத்துச் சிந்திக்கத் தூண்டிய மதிவண்ணன் அவர்களை, எப்படிப் பாராட்டுவது என்றே தெரியவில்லை!'

மதுரை — 1. பிரபாகர் ப்ரியன்.

* 'இறந்த கதவுகள்' சிறுகதை படித்தேன். அதில் நாலு வருடங்களுக்குள் எம்ப்ளாய்மெண்ட் ஆபீஸிலிருந்து இருபது இண்டர் வியூக்கள் வந்துள்ளதா... அது எந்த ஊர் ஸார்.. இந்தியாவில் இப்படியொரு அதிசயம் நிகழுமா...?!

மேல்பட்டி. லோக. கவிதா.

* எம்.ஜி.ஆர். பெயரைச் சொல்லாமல், அவர் புகழ் பாடாமல் தமிழ் நாட்டில் யாரும் அரசியல் நடத்த முடியாது. அதற்குக் கருணாநிதியும் விலக்கல்ல என்பதைக் கார்ட்டூன் மூலம் கட்டிக் காண்பித்திருக்கும் விதம் அருமை!

பூதலூர். இந்திரா ரவி.

* 'பாப்பார புத்திய மாத்தவே முடியாதா?' என்ற கேள்விக்குத் தராக, குறளைக் கூறி பதிலளித்த விதம் அருமை. வலசை புலவரின் நிதானமில்லாத — தி. மு. க. ஆதரவுத்தனமான இந்தக் கேள்வி குறளோவியம் கண்ட கலைஞருக்கு வருத்தத்தையே அளிக்கும்!

வேலூர்.

சே. ஆர். தேவேந்திரன்.

* 'தேர்தல் ஜுரம்' ஜோக்குகளை இரண்டு பக்கங்களில் போட்டு அசத்தி விட்டீர்கள். அவை சிரிப்பதற்கு மட்டுமல்ல, தற்போதைய நாட்டு நிலைமையைப் பற்றிச் சிந்திப்பதற்கும் உதவியது.

திருச்சி. அசோக் ராஜ்குமார் ப்ரியன்.

* கட்சி சார்பாக நின்ற சிறந்த பார்லிமெண்டேரியன் இரா. செழியனையே மக்கள் சென்ற பொதுத் தேர்தலில் தோற்கடித்து விட்டார்கள். நிலைமை இப்படியிருக்க, என்னதான் படிப்பறிவும், அனுபவமும் இருந்தாலும் கட்சி சார்பின்றித் தென் சென்னைத் தொகுதியில் சுயேச்சை வேட்பாளராக நிற்கும் முன்னாள் வெளியுறவுச் செயலர் ஏ. பி. வெங்கடேஸ்வரன் தேர்தலில் வெற்றி பெறுவது என்பது மிகவும் கடினம். இருந்தபோதும் எனது நல்வாழ்த்துக்களை அவருக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

லால்குடி. எம். இராஜேந்திரன்.

* இலங்கை வடக்கு — கிழக்கு மாகாண முதல்வர் வரதராஜ பெருமாள் பேட்டி படித்தேன். புதை குழியில் சிக்கிக் கொஞ்சம் கொஞ்சமாக மூழ்கிக் கொண்டிருக்கும் ஒருவனைக் காப்பாற்றிக் கரை சேர்க்க எண்ணாமல் பெயரளவுக்கு ஒரு துண்டுக் கயிற்றைக் காப்பாற்ற வீசி இருப்பது போல் செய்திருக்கிறது இந்திய அரசு. 'தமிழர் பகுதிகளில் அமைதி ஏற்படுவதற்காகத்தான் எங்கள் இராணுவ வீரர்களின் உயிர்களையும் தியாகம் செய்தோம்' என்று கூறும் இந்திய அரசு, பெருமாள் சொன்னது போல், இலங்கை அரசின் கடமைகளை நிறைவேற்ற அதனை நிர்பந்திக்காமல் — பெருமாளின் தமிழ் அரசைக் காக்க எந்த நடவடிக்கையும் எடுக்காமல் — அமைதிப்படை அங்கிருந்து வெளியேறுவது சரியான வழி அல்ல. இதற்காகவா நம் படை அங்கு இவ்வளவு காலம் போராடியது?

சென்னை — 5. எஸ். வி. ஆர்.

* 'கோர்பசேவ் தலையில்' சிறுகதையைப் படித்தேன். ஆசிரியர் ஊனமுற்றவர்களின் உள்ளக் குமுறலை அழகாக எழுதி, மனத்தை நெகிழச் செய்து விட்டார். மொத்தத்தில் இச் சிறுகதை, ஊனமுற்றோர் உள்ளத்தில் உற்சாக முரசு கொட்டித் தன்னம்பிக்கை ஊற்றாக விளங்கும் என்பதில் ஐயமில்லை.

புதுவை — 1. பழ. திருமலை.

## கர்நாடகம்:

# ஜனதா தளம் ஆட்சியைப் பிடிக்குமா?



* ஹெக்டே



* வீரேந்திர பாட்டீல்



* குண்டுராவ்

ஜனதா தளம் அலுவலகத்தில் போஸ்டர்கள் வந்து புது பிரிண்ட் மணம் கமழக் கீழே இறங்குவதும், தொண்டர்கள் பிரித்துக் கொண்டு போவதுமாகக் கலகலப்பாக இருந்தது. காங்கிரஸ் அலுவலகத்தில் இரண்டு மூன்று பேரைத் தவிர, வேறு யாரையும் காணோம்; பேலஸ் கிரௌன்ட் ஆபீசில் வீரேந்திர பாட்டீலுடன் சில ஆதரவாளர்கள் இருந்தார்கள். "ஜனதா தளத்துக்கு ஹெக்டேயும், ஜனதா கட்சிக்கு தேவ கவுடாவும் தலைவர்கள் என்று அறிவிக்கப்பட்ட மாதிரி, காங்கிரசுக்கு யார்?" என்று கேட்ட போது, வீரேந்திர பாட்டீலின் பதில்: "சட்டசபைத் தலைவர் யாராக இருப்பார் என்று தேர்தலுக்கு முன்னால் அறிவித்து விடுவோம்!"

பெங்களூர் — தெற்கு தொகுதியில், பாராளுமன்றத்துக்கு நிற்கும் குண்டுராவுக்கு முக்கிய எதிரி, எம். ரகுபதி (ஜனதா தளம்). ரகுபதிக்கு அவ்வளவாகப் பெயர் இல்லை என்றும், குண்டுராவே ஜெயிப்பார் என்றும் ஜனதா தள வட்டாரத்திலேயே அடிபடுகிறது. சட்டசபைத் தேர்தலைப் பொறுத்த மட்டில், "ஜனதா தளம் 140 சீட்டுக்களை எளிதாகப் பிடித்துவிடும். நாங்களே மறுபடி ஆட்சிக்கு வருவோம்!" என்கிறார் ஜனதா தள எம். பி, வி. எஸ். கிருஷ்ணய்யர்.

"ஜனதா தளத்துக்கு எதிராகத் தேவ கவுடா எல்லா இடங்களிலும் தமது ஆட்களை நிறுத்தியிருக்கிறாரே?"

"அவரோடு ஒரு பத்துப் பேர் அவர் கட்சியில் ஜெயிப்பார்கள். மற்றபடி அவருடைய ஜனதா கட்சி பெரிதாக ஒன்றும் எங்களைப் பாதித்துவிடாது!"

போதும் போதாதற்கு, தேவ கவுடாவின் தீவிர ஆதரவாளரும், அவருடைய சம்பந்தியுமான பன்னூர் எம். எல். ஏ. ராமசாமி, தமக்கு மறுபடி பன்னூர் சீட் தரவில்லை என்று, ஜனதா கட்சியிலிருந்தே விலகி விடுவதாகப் போர்க்கொடி உயர்த்திவிட்டார். கட்சியில் இது பலவீனத்தை உண்டாக்கியிருக்கிறது.

பெங்களூரின் புகழ்பெற்ற ஆங்கிலத் தினசரியின் செய்தி ஆசிரியர் தெரிவித்தார்.

"ஜனதா தளம் — காங்கிரஸ் இரண்டுக்கும் சட்டசபைத் தேர்தலில் ஐம்பது — ஐம்பது சதவீத சான்ஸ்தான் சொல்ல முடியும். ஜனதா தளத்துக்கு, முன்பிருந்த நல்ல பெயர் இப்போது முழுமையாக இல்லை. எக்ஸைஸ் கொள்கையில் தடுமாறி, வீதிக்கு இரண்டு ஒயின் ஷாப்புகளுக்கு உரிமம் கொடுத்து, பெயரைக் கெடுத்துக் கொண்டிருக்கிறது."

ஹெக்டே நிற்கும் பசவங்குடி தொகுதியில், அவருக்கு ஆதரவு நிறையவே இருப்பது தெரிந்தது — தனிப்பட்ட பலரைச் சந்தித்து விசாரித்ததில். அவரை எதிர்த்து நிற்கும் ஹாரநல்லி ராமசாமி (காங்கிரஸ்) எளிதில் விட்டுக் கொடுத்திட மாட்டார் என்றாலும், ஹெக்டேக்கு வெற்றி கிடைப்பதில் சந்தேகம்



* தேவ கௌடா



"நாலு கட்சிக் கூட்டணியா இருக்கலாம்... அதுக்காகத் தலைவர் இப்படியா கோஷம் போடறது!"

"அப்புடி என்ன கோஷம் போட்டார்?"

"இந்தக் கூட்டணி போதுமா? இன்னும் கொஞ்சம் வேணுமா!"

— எஸ். முகம்மது யூசுப்.

---



நிருபர்: உங்க கட்சி தோற்றுப் போயிட்டா என்ன பண்ணுவீங்க?

கட்சித் தலைவர்: ஆட்சிக்கு வர்ற கட்சியைப் பதவி விலகக் கோரி நாடு தழுவிய ஆர்ப்பாட்டம் நடத்துவோம்!

---

கட்சித் தலைவர்: நம்ம வேட்பாளர் சரியான அவசரக் குடுக்கை...!

செயலாளர்: ஏன்... என்ன பண்ணினார்?

கட்சித் தலைவர்: இன்னும் தேர்தலே நடந்து முடியலை; அதுக்குள்ள டெல்லி போறதுக்காக டிக்கெட் புக் பண்ணி வச்சிட்டாரு!

— வி. கி. குமார்.



இல்லை என்கிறார்கள். "ஹெக்டேக்கு முன்பிருந்த பெயரும் புகழும் இப்போது இல்லை. நில பேர வழக்கில் ஹைகோர்ட் இவரை நிரபராதி என்று சொல்லி விட்டாலும் கூட, பெயரில் களங்கம் என்னவோ ஒட்டிக் கொண்டிருக்கிறது! ஹெக்டே எதையும் 'பாலிஷ்ட்' ஆகச் செய்வார். அவருடைய குற்றங் குறைகளைக் கண்டுபிடிப்பது கஷ்டம்!" என்றார் ஒரு தனியார் துறை அதிகாரி.

மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியான சி. பி. எம். மட்டுமே ஜனதா தளத்துடன் கூட்டுச் சேர்ந்திருக்கிறது. சி. பி. ஐ. கடைசி வரை இழுபறி நிலையிலே இருந்து, பேச்சு வார்த்தைகள் திருப்தி அளிக்காமல், ஒரே ஒரு பார்லிமெண்ட் தொகுதியில் மட்டும் போட்டியிடுகிறது. அங்கே ஜனதா தளம் தனது வேட்பாளரை நிறுத்தவில்லை என்பதும், சி. பி. ஐ. ஜனதா தளத்தை மற்ற இடங்களில் ஆதரிக்கும் என்பதும், ஜனதா தளத்துக்குக் கிடைத்திருக்கிற ப் ள ஸ் பாயிண்ட்டுகள்.

"**கா**ங்கிரஸ் கட்சியில், மார்க்ரெட் ஆல்வாவின் கோஷ்டியைச் சேர்ந்த முனிசாமிக்கும், ஜாஃபர் ஷரீப் கோஷ்டியைச் சேர்ந்த கண்ணனுக்கும் ஆகவே ஆகாது. சாந்தி நகரில் மூன்று தடவை காங்கிரஸ் வேட்பாளரை இதுவரை ம ா ற் றி வி ட் டார்கள்!" என்கிறார் ஏ. சுப்பிரமணியம். இவர் ஜனதா தள சிவாஜி நகர் பகுதித் தலைவர். "இந்த ஓர் இடத்தில் மட்டுமல்ல, சிக்பெட், பின்னிபெட், சாம்ராஜ்பெட், பெங்களூர் சிடி, ராஜாஜி நகர் எல்லா இடத்திலும் இதே கதைதான்!" என்றார் ஹுசேன் ஷரீப். (இவர் சிவாஜி நகர் ஜனதா தள முதுநிலை இணைத் தலைவர்.)

**சை**கா அணுமின் நிலையம் நிறுவுவதை எதிர்த்து கார்வார் பார்லிமெண்ட் தொகுதியில் போட்டியிடுகிறார், புகழ்பெற்ற எழுத்தாளர் சிவராம காரந்த். "ஜனதா தள ஆதரவில் போட்டியிடுங்கள்!" என்று ஹெக்டே கேட்டுக் கொண்டும் கூட, மறுத்து விட்டுச் சுயேச்சையாகப் போட்டியிடுகிறார். ஊழலோ, நிர்வாகத் திறமையின்மையோ இவரது முக்கிய பிரச்னை அல்ல. சுற்றுச் சூழல் பாதுகாப்பு ஒன்றே லட்சியம். ஒரு பொதுத் தேர்தலில், இப்படி ஒரு பிரச்னையை மட்டுமே வைத்துப் போட்டியிடுகிறவர், சரித்திரத்திலேயே இவர் ஒருவர் தான். (அதுவும் பிரசாரம் எதுவும் செய்யவில்லை; அவர்பாட்டுக்குஅமெரிக்காவுக்குப் போய்விட்டார் என்கிறார்கள்!) டீவி, சினிமா புகழ் அனந்த் நாக் இவரை எதிர்த்துப் போட்டியிடும் ஜனதா தள வேட்பாளர்; ஹெக்டேயின் நண்பர். இவரது வெற்றி நிச்சயம் என்கிறார்கள்.

— **சித்தார்த்**

# வெற்றி விழா



பழசையெல்லாம் மறந்து போன இன்சோம்னியா கேஸ் என்ற நிலையில் கடற்கரையோரம் காப்பாற்றப்படும் கமல். அவரை ஜிந்தா என்ற பயங்கர சமூக விரோதியாக முதலில் நம்மை சந்தேகிக்க வைத்துப் பிறகு ஒரிஜினல் ஜிந்தாவைக் கருவறுக்கப் புறப்பட்ட காவல் அதிகாரியாக இனம் காட்டுகிறார்கள். உபயம்: டி. ஐ. ஜி. ராதாரவி. பிரபுவின் துணையுடன் கமல் தன் கடமையை அநேக ஸ்டண்டுகள் மூலம் நிறைவேற்றுகிறார்.

செமை மசாலா படம். பிரதாப்போத்தனின் ஜெட் வேகம். அந்தந்த மூடுக்குத் தக்கபடி நடிக்கவும் தெரிந்த அசோக்குமாரின் அகலத் திரை காமெரா தூள். அப்புறம்...

முழுக்க முழுக்கக் கமல்தான். 'நான் யார்?' விசாரம் நடுநடுவே தலைதூக்கும் போது சற்று ஓய்ச்சல் காட்டுகிறாரே தவிர, மற்றபடி ஆக்ஷன் ஒரே ஆக்ஷன். அமலாவின் அஸ்தமனக் காட்சிப் பின்னணியில் கொஞ்சம் போல் கண் கலங்கும் போது தொடுகிறார். மற்றபடி அகிலத்தையே சுருட்டும் அசட்டுப்பிசட்டான ஹீரோத்தனம்தான். 'நான் நல்லவனா கெட்டவனான்னு எனக்கே தெரியலை,' என்று சந்தேகப்படுவது கமல் மட்டுமல்ல; நாமும்தான்.

பிரபு அநியாயத்துக்கு அடக்கி வாசித்திருக்கிறார். ஆனால் படு துள்ளல். தோதாக, அசட்டுக் குஷ்பூ துணை. அது மேல் விழுந்து இளிப்புக் காட்டிக் கொஞ்சும் வெகுளித்தனமாகட்டும்; அதன் சகோதர, குடும்ப விவகாரத்தை அலசி, விவஸ்தை கெட்ட குடும்பம் என்று பிரபு கிண்டலடிப்பதாகட்டும் இதம்தான். கமலுக்கு ஹெல்ப்பராய்... அதோடு சரி.

புதுசாய் அறிமுகமாகும் வில்லன் ஜிந்தா (சலீம் கௌஸ்) வேறு எங்கோ தேறியவராய்த் தெரிகிறார். ரொம்பச் சாதாரண பாவத்துக்குள் திடுப் திடுப்பென்று காட்டும் அந்தச் சிலுப்பல், அன்னியமான தமிழ், அந்தப் பாம்புப் பார்வை, சீறல் — புதுசாய் இல்லையோ?

அமலா கௌரவமாய் வந்தாலும் இரண்டொரு காட்சிகளிலேயே கௌவிக் கொண்டு போகிறார். விளக்கிலே விட்டில் விழ்வது போல் அந்த இரண்டாவது ஆபத்தை அவராய் வலிய ஏற்றுக் கொள்ளும் போது, 'ஐயோ வேண்டாமே!' என்று அலறலாம் போலிருக்கிறது.

ஜனகராஜ் பாவம், உயிரை விட்டுக் கத்தி, கோணல் பார்வையும் ஆர்ப்பாட்டமும் காட்டினாலும் — நீரில் விழுந்த வெடியாகிப் போகிறார்.

சௌகார் ஜானகி — சசிகலா தாய் மகள் ஒட்டுதல் ஏனோ மனசிலே ஒட்டவில்லை. கமலுக்கு ஜோடியாய் வாய்த்தும், அப்படி அப்படியே மேலே விழுந்து ரொமான்ஸ் பண்ணியும் அது யார் என்று கேட்கிற மாதிரி ஏதோ கறிவேப்பிலை சேவைதான் பாவம், சசிக்கு.

இசையைக் காட்டிலும் சண்டை போன்ற வேறு காட்சிகளில் உயிர் கொடுக்கும் பின்னணி ஓசைகளில் இளையராஜாவின் அடையாளம் தூக்கல்.

கம்பி மத்தாப்பூ ரகம். பார்த்துக் கொண்டிருக்கும் வரை சுறுசுறுவென்றுதான் இருக்கிறது...

— பி. எஸ். எஸ்.

இந்தியாவின் மிக அதிகமாக விற்பனையாகும் காமிராக்கள்

# Snapper

Snapper 35

Snapper 300




Snapper 300 F

Snappet 110 E



ஸ்நேப்பர் உங்கள் பணத்திற்கு உயர்ந்த மதிப்பைத் தருகிறது. எண்ணற்ற பலவித மாடல்கள். மற்றும் அது தனக்கே உரிய தனிப்பட்ட தரத்துடன் உருவாக்கும் ஒப்பிலா அம்சங்களைக் கொண்டது. அதனால்தான் இதர காமிராக்களுடன் ஒப்பிடுகையில் ஸ்நேப்பர் கணக்கற்ற மக்களின் புன்னகை சின்னமாக விளங்குகிறது.

**Snapper காமிராக்கள்** *புன்னகையின் சின்னம்*

விற்பனைக்கு விடுப்பது:
ஆக்ஃபா கேவார்ட் இந்தியா லிமிடெட்.

ULKA-12097 TAM

# இரண்டாவது சூரியன்

## 17

அந்த அறையிலுள்ள அத்தனை டீச்சர்களும் இடைவிடாது பேசினார்கள். கோபப்பட்டார்கள். அழுதார்கள்.

பானுமதி ஆச்சர்யத்துடன் அவர்களைக் கவனித்துக் கொண்டிருந்தாள். அவளிடம் தான் தகவல் கேட்டார்கள். "என்ன ஆயிற்று? எப்படி நடந்தது? இப்போது நிலைமை என்ன?" எல்லாம் கேட்டார்கள். கோபப்பட்டார்கள்.

"வெட்டிப் போடணும், அந்தப் படவாவ. மூளை சரியில்லையா உன் பொண்டாட்டிக்கு.... தூக்கு மாட்டிண்டு தொங்கு. இன்னொரு பொண் வாழ்க்கையை ஏன் பாழாக்கறே.. திமிருதானே."

'அப்போ மூளை சரியில்லாத பெண் கதி?' பானுமதிக்குக் கேள்வி வந்தது. கேட்கவில்லை.

"இவளுக்குப் புத்தியில்லை, டீச்சர். சாவித்திரிக்கு அறிவே இல்லை. அவ பாட்டுக்குப் பள்ளிக்கூடம் வீடுன்னு இருந்தவதானே. எதுக்கு லவ்வு. உனக்கு என்ன குறைச்சல்? உன் அழகுக்கும், படிப்புக்கும் வீட்டுப் படியேறி பொண் பார்த்துக் கொத்திண்டு போக மாட்டானா..."

"கரெக்ட். நீ சொல்றது கரெக்ட். பொம்பளை ஒழுக்கமா இருந்தாப் பிரச்னையே வராது. ஆனா இருக்க முடியாதே. கொஞ்சம் சிவப்புத் தோல், சுருட்டை முடி இருந்துட்டா உலகமே காலடில விழுணும்னு எதிர்பார்க்கறீங்களே... கதைல வர லவ்வு நிசத்துல நடக்காதான்னு கனா வருதே... சினிமாப் பாட்டுச் சூடு ஏத்துதே... எப்படிச் சும்மா இருக்க முடியும்? லவ்வுதான்..."

"அவ லவ் பண்ணதுல தப்பு இல்லை. அந்தக் கடங்காரன் ஏமாத்திட்டான். தனக்குக் கல்யாணம் நடந்துதுன்னு சொல்லவேயில்லை. இவ கல்யாணத்துக்கு கம்பெல் பண்ணதும் நிதானமாச் சொல்றானாம்... எழவெடுத்தவன். லவ் செஞ்ச பொம்பளை என்ன பண்ணுவா? மனசக் கொடுத்துட்டு எப்படி மாத்திப்பா?"

"மாத்திக்கணும். போடா நாயே, நீ இல்லாட்டி வேற ஒருத்தன்னு நகர்ந்துடணும்..."

"நகர்ந்தாளே. இனிமே கல்யாணம் காதல் எதுவுமே வேண்டாம்னு நகர்ந்தாளே."

"அவன் மாத்திரை முழுங்கினதுக்கு. இவ டிக் ட்வெண்டி குடிச்சானாம். இது நகர்ந்ததா. சாவுடான்னு தலைமுழுகிட்டுப் பள்ளிக் கூடம் வரவேண்டியதுதானே...?"

"ஒரு லேடியால இப்படிச் செய்ய முடியாது, டீச்சர். ஆயிரம் குறை இருந்தாலும் லவ் பண்ணவன் துடிக்கற போது இவளும் துடிப்பா... இதுதான் பொம்மனாட்டி. இதான் லேடீஸ் மனசு."

"அப்போ சாவு... உனக்கு வேணும். இதுவும் வேணும். இன்னமும் வேணும்... வாய்ல ட்யூப் விட்டு கதறக் கதற வைத்தியம் பண்ணுவாங்க. படு."

சில பெண்கள் இந்தக் கடுமைக்குக் காது பொத்திக் கொண்டார்கள்.

"சுவரு தாண்டணும்னு ட்ரை பண்றே. தாண்டற முன்னாடி தனக்கு வலுவு இருக்கான்னு பார்க்க வேணாமா? நொண்டி. முடம் எப்படித் தாண்ட முடியும்? தாண்டச் சொல்ல சறுக்கினா தட்டி விட்டு எழுந்திருக்க வேணாமா? சுவரு தூக்கி அந்தாண்ட போடும்னு எப்படி நீ எதிர்பார்க்கிறே?"

"சுவரு தூக்கிப் போடும்னு யாரும் எதிர்பார்க்க மாட்டாங்க. ஊரு உலகம் சறுக்கி விழுந்ததுக்குச் சிரிக்குமேன்னு பயப்படுவாங்க. அப்படிப் பயந்துட்டா சாவித்திரி."

"அந்தப் பயம் முதல்ல இருந்திருக்கணும். தாண்டின பிறகு வரக் கூடாது. உனக்கு ஏன் லவ்வுன்னு கேட்கறேன்."

"லவ் ஒரு புனிதமான விஷயம்.. ஆம்பளைங்க அதை..."

"போடி.. போடி அசிங்கமா வருது வாய்ல... உங்களுக்குத் தினவு..."

"ரெடிக்குலஸ். காட்டுமிராண்டி..."

"ஏய்...."

பிறகு ஒரே சத்தம். இடைவிடாத விவாதம். குழந்தைகள் நாலைந்து எட்டிப் பார்த்து விட்டுப் போயின. பானுமதி ஆசிரியைகள் அறையை விட்டு வெளியேறினாள்.

இவர்கள் ஒருவர் கூட ஆஸ்பத்திரி வாசலுக்கு வர மாட்டார்கள். வந்தால் மார் போடு அணைத்த கைப்பையைக் கீழே வைத்து விட்டுத் தோள் பிடிக்க மாட்டார்கள். ட்யூப் செருகலை, உப்புக் கரைசல் நாற்றத்தைத் தாங்க மாட்டார்கள். அப்படித் தெரியாத்தனமாய்த் தாங்கினாலும் சொல்லிக் காட்டாது இருக்க மாட்டார்கள்.

"இவ லவ் பண்ண லட்சணத்துக்கு என் புடைவையெல்லாம் நாத்தம்."

இன்றைய பெண்களிடம் ஏதோ ஒரு பெரிய குறை இருக்கிறது. என்ன அது? பேச்சு. அதிகம் பேசுகிறார்கள். அனுபவக்

பாலகுமாரன்

குறைவால் வரும் பேச்சு. அரை குறை அனுபவம் தரும் அலட்டல். காதல் என்பதைச் சொன்னவளும் புரிந்து கொள்ளவில்லை. எதிர்த்தவளும் அறிந்து கொள்ளவில்லை. காதல் என்பது கெட்டுப் போவது என்று அர்த்தமாகி விட்டது. காதல் என்பது கற்போடு பிணைந்து விட்டது. காதல் உடம்பு சமாச்சாரம் என்று யோசிக்கிறார்கள். தினவு என்று கொச்சைப்படுத்துகிறார்கள். காதல் உடம்பு மட்டுமே என்கிறார்கள். காதல் உடம்பு மட்டுமில்லை. மனசும் கலந்தது. உடம்பு மட்டுமெனில் சாவித்திரி வேறு யாரோடும் சுற்றிக் கொண்டிருப்பாள். சாவித்திரி மனசு இழந்தாள். இந்த இழப்புத் தாளாமல் உயிர் இழக்க முயற்சி செய்தாள். அவனை மறக்க முடியவில்லையே என்று தவித்திருக்கிறாள். இது ஏன் இந்த டீச்சர்ஸுக்குப் புரியவில்லை.

ஒரு டீச்சர் காதலைப் புத்தகத்தில் படித்தவள். கிறங்கியவள். மற்றொரு டீச்சர் புத்தகத்தில் கூடப் படிக்காதே என்பவள். இருவருமே அனுபவ சூன்யங்கள். இது முறம். இல்லை இது தூண் என்று சண்டை போடுகிறார்கள்.

நான் ஏன் இதில் கலந்து கொள்ளவில்லை. எனக்கு ஏன் இந்த வாதங்கள் பிடிக்கவில்லை. நான் அனுபவசாலியா? காதல் என்பதை அறிவேனா? நெல் முனையளவு கூடக் காதலில்லாத புருஷனிடம் வாழ்ந்து விட்டு... இல்லை எனக்கு வறுமை தெரியும்; காதலற்ற வாழ்வின் வறுமை தெரியும். அன்புக்கு ஏங்கி ஏங்கி அதன் அருமை தெரியும். உச்சகட்டப் பசியில் பிடி சோறு வாசனை கூட வேதனை தணிக்கும். சாவித்திரியை நேசித்தவன் நல்லவனோ, கெட்டவனோ, சாவித்திரியின் நேசம் புரியும். அவன் மரணத்துக்கு நகர இவளும் உடனே குதித்து விட்டது புரியும்.

சாவித்திரியின் உணர்வு தப்பில்லை. காதலன் எங்கு சென்றாலும், அவன் பின்னே போகும் உணர்வு தவறில்லை. ஊசலாடி ஊர் வாயில் விழுந்து கொண்டிருக்கிறாளே அதுதான் தவறு. இனி அவள் காதல் அவளை என்னவாய்ச் செய்யும் என்பதுதான் கேள்வி.

செத்துப் போக வேண்டும் என்கிற துடிப்பு, கலப்பில்லாத உண்மை. செத்துப் போகாதது துரதிருஷ்டம். நீ என்ன செய்யப்



போகிறாய் சாவித்திரி? தினவுடி என்று பேச்சு வாங்கப் போகிறாயா? தேவையே இல்லை காதல் என்று துடைத்தெறியப் போகிறாயா? நாளைக்கு வயதாகி, யாரும் காதலிக்கக் கண்டால் சற்று முன் பேசின மச்சர் மாதிரி இல்லை அதை விடவும் கடுமையாய்...

'கொஞ்சம் சிவப்பா சுருட்டை முடியா இருந்துட்டா சிவ்வுன்னுதோ... லவ்வாம் லவ்வு... நாய்ப்புத்தி...' என்று கூச்சலிடு வாயா? சாவித்திரி நீ இதற்குச் செத்துப் போயிருக்கலாம்.

உடம்பைக் குறுக்கி, ஊரைக் கடித்து, உலகம் வெறுத்து, எல்லார் மீதும் எல்லா நேரமும் வெறுப்புத் துப்பி.. அவன் அப்படித்தானே செய்தான். நேசிக்கத் தெரியாமல் சகலரையும் ஏமாற்றினான். நேசிப்பு முட்டாள்தனம் என்ற முடிவுக்கு வந்து அதை வியாபாரமாக்கினான்.

அடக்கச் சொல்லி, அடக்கச் சொல்லிப் பெண்களைக் கட்டாயப்படுத்துகிறார்கள். அடக்கமாய் இரு என்று வற்புறுத்துகிறார்கள். வாய் திறந்து கேட்காதே என்கிறார்கள். எல்லாத் துவாரங்களையும் அடைத்து விடுகிறார்கள். காதல் நெஞ்சுக் கூடு பிளந்து, வெளியே வந்து விடுகிறது. தலை கால் புரியாது வெளியே வருகிறது. சாவித்திரியின் தோல்வி கூட பேச முடியாத காரணம். திருட்டுத்தனம் காரணம்.

'நீ யார்? உன் வீடு எங்கே, உன் உறவு உற்றார் யார்?' என்று சாவித்திரிக்கு அறிய வாய்ப்பில்லை. படகு மறைப்பும், சினிமா இருட்டும் சண்டைகளை மறைத்து விட்டன. தெரிந்து கொள்ள வசதியில்லை. ஏன்? அனுமதியில்லை. காதல் அவமானம். அதனால் திருட்டுத்தனம்.

'என்ன சாவித்திரி, இந்தப் பக்கம்?'

'நம்ம தோஸ்த் இந்த ஏரியாதான். வீட்டுக்குப் போனேன் காணோம். அதான் வெளிய தேடறேன். அதோ வராரு. வாங்க. இது பானுமதி. என் கூட வேலை செய்ற வங்க. இதுதான் நம்ம தோஸ்த். பேரு...'

சொல்ல முடியுமா? 'மை மேன்' என்று சொல்ல முடியுமா? சொல்ல முடியவில்லை. டிக்ட்வெண்டி சொல்லி விட்டது. சகல கதையையும் தெருவில் கொட்டி விட்டது. இது மேலும் அவமானம். தலை இறக்கம்.

பெண்ணுக்கு ஏன் இது மறுக்கப்பட்டது? யார் மறுத்தார்கள்?

பெண் மறுத்தாள். ஒரு பெண் சந்தோஷத்தை இன்னொரு பெண் மறுத்தாள்.

'ஐயோ சாவித்திரியா? அது தெருத் தெருவா அலைய்றதுடி. நீலச் சட்டையோட ஒரு தடவை பார்த்தேன். ப்ளைன் பனியனோட ஒரு தடவை பார்த்தேன். யாரு அவர் என்னன்னு தெரியலை. இரண்டு பேரும் ஒண்ணா வெவ்வேறா தெரியலை. நான் நிமிர்ந்தே பார்க்கலை. சரசரன்னு வந்துட்டேன்.'

நிமிர்ந்து பார்க்காத விஷயத்தை கண் காது மூக்கு... இடித்துரைத்து... ஏன்? ஏன் இந்த புத்தி..

பெண் சுயநலமி. தன் புடைவைக் கரையை விட அடுத்தவள் கரை பச்சை. அவளுக்குத் தன் நெஞ்சு வளமையை எதிர்பட்ட பெண்ணோடு ஒப்பிட்டுப் பார்க்கும் புத்தி.

ஏன்? ஏன், இவ்விதம் சுயநலமி ஆனாள். இது இயல்பா, அவள் கல்யாண குணமா?

இல்லை. அவள் வளர்க்கப்பட்ட விதம். ஆயிரமாயிரம் ஆண்டு காலம் அடிமையாய்... தனக்கு வேண்டிய புடைவையைத் தான் வாங்கிக் கொள்ள முடியாத பொருளாதார அடிமைத்தனம். கையில் காசு இல்லாது பிறரை அண்டி வாழ்ந்த — வாழ வைக்கப்பட்ட தன்மை. சின்னப் பரிசுக்கும் பெரிசாய் அலட்டும் தன்மை. சிறிய தவறுக்கும் குமைந்து போகும் மனப்பாங்கு. விதி விட்ட வழி என்கிற சுருளல்.

பொருளாதார விடுதலை வந்து விட்டதே... தன் புடைவையைத் தானே... நேற்று... நேற்றுக் கிடைத்த சுதந்திரம். அடிமையாய்க் கிடந்த நாட்களோடு ஒப்பிட, இந்தக் காலம் ஒரு தூசு. இன்னும் அவள் தெளிய வெகு நாட்கள் ஆகும். சிறிய பொருளாதார விடுதலை வந்துவிட்டது உண்மை. உணர்வுச் சங்கிலியிலிருந்து விடுபடவில்லை. தன் தாழ்வு மனப்பான்மையிலிருந்து தப்பித்துக் கொள்ளவில்லை. தன் சுதந்திரம் எவ்வளவு என்று யோசிக்கவேயில்லை. ஒருத்தி முன்னேற இன்னொருத்தி பிடித்திழுக்கிறாள். ஓடாதே விழுந்துடுவே என்கிறாள். விழுந்தவளை எவளும் தூக்கக் காணோம். மருந்து போட முன்வரவில்லை. 'ஏண்டி பாவி ஏறினே?' என்று கூச்சலிடுகிறார்கள். இதுதான் பெட்டைக் கூச்சல். கையாலாகாத்தனம்.

என் வாழ்க்கை பற்றியும் இப்படித்தான் கூச்சலிட்டார்கள். ஒரு அதட்டல் போட்டதும் பொத்திக் கொண்டார்கள். சாவித்திரிக்குச் சொல்லித் தந்துவிட வேண்டும். யாரும் வந்து புலம்பினால் கெட் அவுட் என்று கூறச் சொல்ல வேண்டும். நன் ஆப் யுவர் பிஸினஸ் என்று மறுக்கச் சொல்ல வேண்டும். என் வாழ்வு என் தாழ்வு என் விஷயம் உன் அனுதாபம் தேவையில்லை என்று திடம் கொள்ள வேண்டும்.

சாவித்திரி கொள்வாளா? அப்பா... நான் எவ்விதம் இப்படித் தொடர்ச்சியாய் இழை பிசகாது யோசிக்கிறேன். இந்த யோசிப்பே எத்தனை சந்தோஷமாக இருக்கிறது. இப்படி யோசிக்க முடிவதே எவ்வளவு விடுதலையாக இருக்கிறது.

யோசிப்பு மட்டும் போதுமா.

**பா**னுமதி இடைவேளையின் போது பள்ளி வாசலில் நின்று விளையாட்டு



மைதானம் பார்த்துக் கொண்டிருந்தாள்.

ஆயிரம் பெண் குழந்தைகள் ஆடிக் கொண்டிருந்தன. குழுக் குழுவாய் உணவு முடித்துக் கொண்டிருந்தன. இந்தக் கும்பலில் எத்தனை லஸ்லோ எத்தனை டிக்ட்வென்டியோ. சாவித்திரிக்குச் சொல்லித் தருகிறோமோ இல்லையோ... இவர்களுக்குச் சொல்லித் தர வேண்டும். சொல்லித் தர விடுவார்களா? தியானம் சொல்லித் தரவே இடைஞ்சல் வருகிறது. காதலும் செக்ஸூம் கல்யாணமும் பேச விடுவார்களா?

'சொல்லிக் கொடுக்க ஒரு யோக்கியதை வேணாமா. நீ தோத்துப் போனவ. புருஷனோட குடித்தனம் பண்ணாதவ. உனக்கு எதுக்கு இந்தப் பாடம் போதிக்கிற வேலை?' பேசுவார்களோ.

வாய் வார்த்தையாய்ச் சொல்லித் தருவதை விட வாழ்க்கையாய் நிற்பது நல்ல பாடமோ. வ ா ழ் ந் து காட்ட வேண்டுமோ. மறுபடி வாழ்ந்து காட்டுதல். இன்னொரு வாழ்க்கை வருமா. அமையுமா எனக்கு? கடவுளே.

கடவுளை ஏன் கூப்பிடுகிறாய்? பானுமதி நீ யோசி.

யோசிக்க வேண்டும்.

பள்ளி மணி சிந்தனைத் தொடரைக் கலைத்தது.

''**டீ**ச்சர் உங்களுக்கு ஃபோன்.''

''ஃபோனா... எனக்கா?'' பகீரென்றது. அந்த ஆள் ஏதும் பேசப் போகிறானா? 'எங்கடி எவ கூடயோ மோட்டார் சைக்கிள்ள போறே...' மிரட்டப் போகிறானோ?

' ச்சை... என் பயத்தைப் பார்.'

' ஆமாம். போனேன் என்னா அதுக்கு?'

' எப்படி?''

' போடா... போய் சுவத்துல முட்டிக்க.'

''ஹலோ பானுமதி.''

''மேடம், நான் பரத்.''

அப்பாடா. வயிறு நிம்மதியில் பரவிக் குளிர்ந்தது.

''யெஸ் மிஸ்டர், பரத்.''

''கேட்டீங்களா ட்ரான்ஸ்ஃபர் பண்ண நான் ஒரு .அஸிஸ்டன்ட் கமிஷனரைப் பார்த்துப் பேசி ஹெல்ப் கேட்டேன். என் சிநேகிதன் அப்பா,செய்யலாம்னாரு.''

'கேட்கவேயில்லை. இனிமேல்தான் ஹாஸ்பிடல் போக வேண்டும். நேற்றுச் சுருண்டு படுத்துத் தூங்கியாயிற்று. காலை பள்ளிக்கு வந்ததோடு சரி. கூச்சல் கேட்டதோடு சரி.'

''பரத், உங்க ஃபோன் நெம்பர் என்ன?'' சொன்னான்.

''பத்து நிமிஷத்துல ஃபோன் பண்றேன்.''

''யாரு பானுமதி ஃபோன்ல' ஹெச். எம். கேட்டாள்.

''கொஞ்சம் இருங்க பரத்.''

''மேடம். நேத்து டாக்டர் வேற ஆஸ்பிடல் மாத்த அட்வைஸ் பண்ணாரு. போலீஸ் அட்ஜஸ்ட் பண்ணிக்கிட்டா மாத்திடலாமாம். பெட்டர் ட்ரீட்மென்ட் சைட் எபெக்ட் வராத குறைக்குமாம். டிக்ட்வென்டில நிறைய சைட் எபெக்ட் வருமாங்க.''

''எங்க சேர்க்கலாம்?''

''நாலைஞ்சு ஆஸ்பிடல் இருக்கு மேடம். டாக்டரே சில பேர் சொன்னாரு.''

''பத்து நிமிஷத்துல எப்படிச் சொல்ல முடியும் பதில். சாவித்திரி வீட்டில் கன்ஸல்ட் பண்ண வேண்டாமா. என்கிட்ட கொடு ஃபோனை.''

''ஹலோ. நான் ஹெட்மிஸ்ட்ரஸ் பேசறேன். நேத்து பார்த்த தம்பியா... நானும் பானுமதி டீச்சரும் ஆஸ்பிடல் போறோம். அங்க போய்ப் பேசிட்டுத் தகவல் சொல்லலாமா? நேற்று நீங்கள் செய்த உதவி மகத்தானது. பல சிரமங்கள் உங்களுக்கு. மனித நேயத்தின் உச்சகட்டம். இப்படி ஒரு இதமான ஆண் நான் பார்த்ததில்லை. யூ ஆர் க்ரேட்.''

ஃபோன் துண்டித்தாள்.

''கிளம்பு பானுமதி...''

ஆட்டோவில் ஏறி ஆஸ்பிடல் நோக்கிப் போனார்கள்.

**சா**வித்திரி தெளிந்திருந்தாள்.

உறவுக் கூட்டம் அதிகமிருந்தது.

ஒன்று விட்ட அண்ணனும், பெரியப்பா, சித்தப்பா வகைகளும் மாற்றத் திட்டமிட்டன.

''தென் நோ ப்ராப்ளம். பானுமதி நீ ஒரு ஆட்டோ பிடிச்சு பரத்தைக் கூட்டிக்கிட்டு வா.''

பானுமதி ஓடினாள். ஆட்டோவில் ஏறினாள். விலாசம் சொன்னாள். ஏனோ படபடப்பாய் ஒரு சந்தோஷம் வந்தது.

(தொடரும்)

''தரகரே! மாப்பிள்ளை வீட்டார் ஏன் எழுந்து போயிட்டாங்க!''

''பின்னே, என்னங்க! உங்க பொண்ணு 'நல்லதோர் வீணை செய்தே, அதை நலங்கெடப் புழுதியில் எறிவதுண்டோ'ன்னு பாட ஆரம்பித்தால் என்ன பண்ணுவாங்க!''

— ஞா. ஞானமுத்து.



# ஆயத்தமாகிவிட்டார் ஆனந்தமான நேரத்தை அனுபவித்திட.

அலுவலகத்தில் ஓயாத உழைப்பு, பதற்றம். ஆனால் இப்போதோ அது ஓடி ஒளிந்து விட்டது. குழந்தைகளோடு குழந்தையாய் அளவற்ற சக்தியுடன் விளையாடுகிறார்.

ஊட்டச் சத்துமிக்க ஒரு கோப்பை ஹார்லிக்ஸ் கொடுத்து நாள் முழுவதும் அவருக்கு வேண்டிய வலிமையும் ஆற்றலும் அளிக்கும் உங்களுக்கே நன்றி.



"ஹார்லிக்ஸில், வலிமைக்கும், ஆற்றலுக்கும், நல்ல உடல் ஆரோக்கியத்துக்கும் தேவையான- புரோட்டீன்ஸ், விட்டமின்ஸ், மினரல்ஸ், கார்போஹைட்ரேட்ஸ் –ஆகிய முக்கிய ஊட்டச்சத்துக்கள் அடங்கியுள்ளன.

அதுவே, நாள் முழுவதும் ஆரோக்கியம் தரும் ஹார்லிக்ஸின் மேன்மை."




**சிறந்த ஊட்டச்சத்துமிக்க பானம்**

HTA 6224TAM

# பெரியசாமியின் 'வாக்குமூலம்!'

அந்த அரசு மருத்துவமனையின் அவசர சிகிச்சைப் பிரிவுக்குக் கைத்தாங்கலாகப் பெரியசாமியை அழைத்துக் கொண்டு நுழைந்தான் அவனது மச்சினன் மாரிமுத்து.

பெரியசாமியின் வயிற்றுப் பகுதியில் செருகப்பட்டிருந்த கத்தியிலிருந்து ரத்தம் கசிந்து கொண்டிருந்தது. ஆஜானுபாகுவான சரீரம் கொண்டிருந்த பெரியசாமி, அந்த வலியையும் வேதனையையும் ஓரளவு சமாளித்துக் கொண்டிருந்தான்.

டவுனுக்குப் பக்கத்து கிராமத்தைச் சேர்ந்தவர்கள் இந்த மாமனும் மச்சினனும். வயல் வரப்புத் தகராறொன்றில் வாய்ப்பேச்சு முற்றிக் கைகலப்பு ஏற்படவே, அவனது பங்காளி இடுப்புப் பெல்ட்டிலிருந்து கத்தியை எடுத்து ஒரே செருகாகச் செருகிவிட்டு ஓடிப் போனான். அவசர அவசரமாக ஒரு வண்டி பிடித்து, அவனை மச்சினன் மாரிமுத்து மருத்துவமனைக்கு அழைத்து வந்திருந்தான். கத்தியை உருவி விட்டால் ரத்தப் போக்கு அதிகரிக்கும் என்பதால் அகற்றப் படாமலேயே இருந்தது.

அவசரப் பிரிவில் ரத்தக்களறியோடு பெரியசாமி நுழைந்ததும் ஒரு பரபரப்பு ஏற்பட்டது. அவனை ஒரு நாற்காலியில் அமர வைத்தனர்.

மாரிமுத்து டாக்டரைப் பார்க்க உள்ளே நுழைந்தான். நர்ஸிடம் நோயாளி ஒருவருக்குத் தரவேண்டிய சிகிச்சை பற்றிப் பேசிக் கொண்டிருந்த டாக்டர், மாரிமுத்து திடுதிப்பென்று நுழைந்ததும் அவனைப் பார்த்து இரைந்தார்:

''வெளியே போய்யா. கூப்பிட்டதும் வாய்யா.''

''டாக்டர். எங்க மாமனைக் கத்தியாலே குத்திட்டாங்க. வெளியே துடிச்சிட்டிருக்காரு. கொஞ்சம் பாருங்க.''

''ஏன்யா, அடிதடி கேஸெல்லாம் பார்க்கிறதுக்கா ஆஸ்பத்திரி இருக்கு? போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய்யா. எல்லாம் அவங்க பார்த்துப்பாங்க.''

''ஐயோ... டாக்டர். மொதல்லே நீங்க வைத்தியம் பாருங்க டாக்டர். அவரு உசுரு போயிடப் போவுது...''

''உயிர் இருக்கில்லே. அப்புறம் என்ன? பதறாதே... இதெல்லாம் போலீஸ் கேஸ்யா. அவசரப்பட்டா நடக்காது. போய் உட்கார்.''

''இல்லீங்க, டாக்டர். வந்து...''

''எல்லாம் தெரியும். போய்யா வெளியிலே...''

வெளியே வந்த மாரிமுத்து மாமனிடம், ''போலீஸ் கேஸாம் மாமா. போலீஸெல்லாம் வந்து கம்ப்ளெய்ண்ட் எல்லாம் எழுதினப்புறம்தான் கவனிப்பாங்களாம். நாம வேணும்னா தனியார் டாக்டர்



யார் விட்டுக்காச்சும் போகலாமா?''

''என்னடா வெவரம் தெரியாதவனா இருக்கே. கவர்ன்மெண்ட் ஆஸ்பத்திரியிலேயே பார்க்கலேன்னா வேறே எவன்டா பார்ப்பான்? என்னை உள்ளே அழைச்சிட்டுப் போ, சொல்றேன்.''

தடுத்த வார்டு பாயை ஒரு தள்ளுத் தள்ளிவிட்டு, மச்சினன் தோளைப் பற்றியபடி உள்ளே நுழைந்தான் பெரியசாமி.

''ஏன்யா, வெளியே உட்காரச் சொன்னேனில்லே, ஏன் உள்ளே வந்தே?'' கேட்டார் டாக்டர்.

''டாக்டர், கஷ்டமா இருக்கு. உயிரைத் தாங்கிப் பிடிச்சிட்டிருக்கேன். வைத்தியம் பாருங்க.''

''யோவ், போலீஸுக்குப் போன் பண்ணியிருக்கேன், வருவாங்கய்யா. அவங்க கம்ப்ளைண்ட் ரிஜிஸ்தர் பண்ணிக்கிட்டு உங்ககிட்டே வாக்குமூலம் வாங்குவாங்க. அப்புறந்தான் பார்ப்பேன். அப்படிப் படுத்துக்க.''

''விளையாட்டுச் சமாசாரமா இது...? ஆ... அப்பா... கையெடுத்துக் கும்பிடறேன். கொஞ்சம் கவனிங்கய்யா.''

இதைக் காதில் வாங்கிக் கொள்ளாமல் வேறு நோயாளிக்குச் செய்ய வேண்டிய சிகிச்சை பற்றி நர்ஸிடம் பேச ஆரம்பித்தார் டாக்டர்.

''இப்ப என்ன மாமா பண்ணறது?''



''நீ வெளியே போய்ப் போலீஸையாவது அழைச்சுக்கிட்டு வா...'' முனகினான் பெரியசாமி.

மாரிமுத்து வெளியே ஓடி, நாலாபுறமும் வீதியைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

சற்றுநேரத்தில் படுகேஷுவலாகக் கையில் ஒரு கோப்புடன் ஒரு கான்ஸ்டபிள், நுழையலாமா வேண்டாமா என்ற பாவனையில் சற்று நின்று, சிகரெட்டின் கடைசிப் பகுதியை சுப், சுப்பென்று இழுத்துக் கொண்டிருந்தார். மாரிமுத்து அவரிடம் ஓடி விஷயத்தை விளக்கவும், கடைசி இழுப்பை நிதானமாக இழுத்து சிகரெட்டைச் சுண்டிவிட்டு உள்ளே நுழைந்தார் கான்ஸ்டபிள்.

டாக்டரையும், நன்றாக இருந்த நர்ஸையும் கொஞ்சம் பார்த்துவிட்டு ''இதான் கேஸா?'' என்றபடி பெரியசாமி பக்கம் வந்தார்.

''இன்ஸ்பெக்டர் வரலே?'' என்ற டாக்டரிடம் ''என்னைப் பதிஞ்சுகிட்டிருக்கச் சொன்னார். பின்னாலேயே வர்றார்...'' என்று பெரியசாமியைப் பார்த்து, ''உம் பேர்... உங்கொப்பா பேர்... ஊர்... விலாசம் எல்லாம் என்னாய்யா? வரிசையாச் சொல்!'' என்று குறித்துக்கொள்ள ஆரம்பித்தார்.

வெறுப்போடு, மூச்சிரைக்கப் பதில் சொல்லி முடித்தான் பெரியசாமி.

''ம்.... இப்ப உன் வாக்கு மூலம் சொல்லு'' என்றவுடன் கடுங்கோபமாகிப்போன பெரியசமி, மூச்சுக்கும் முனகலுக்கும் இடையே சிரமப்பட்டு ஆனால் தெளிவாக இப்படிச் சொல்ல ஆரம்பித்தான். அப்போது இன்ஸ்பெக்டரும் நுழைந்தார்.

''எழுதிக்கிங்கஸார்....நான் ஆஸ்துமாலே ரொம்ப அவஸ்தைப் பட்டுக்கிட்டிருந்தேன். அவசரமா ஊசி போட்டுக்கலாம்னு வந்தேன். என்னை ரொம்பநேரம் டாக்டர் கூப்பிடாம காக்க வச்சார். வேதனை தாளாம நான் உள்ளே நுழைஞ்சேங்க. அப்போ இந்த டாக்டர் அந்த நர்ஸ் பொண்ணைக் கட்டிப்புடிச்சு கிஸ் பண்ணிக்கிட்டிருந்தாருங்க. என்னை அசிங்க அசிங்கமாத் திட்டினாங்க. நானும் கோவத்துலே திட்டிப்புட்டேங்க. உடனே 'என்னையாடா நாயே திட்டறேன்னு, கத்தியை எடுத்துக் குத்திட்டாருங்க...

இதைக்கேட்ட டாக்டர் பதறிப்போய், ''யோவ் என்னாய்யா சொல்றே. இது மரண வாக்குமூலம்யா... இந்த ஆள் பொய் சொல்றான். சிஸ்டரை வேணும்னாக் கேட்டுப் பாருங்க...''

திரைமறைவில் இன்ஜெக்ஷன் போட்டுவிட்டு வெளியே வந்த நர்ஸ் இதைக் கேள்விப்பட்டு நடுங்கிப் போனாள்.

''ஸார்... ஸார்... இந்த ஆள் அபாண்டமாப் பொய் சொல்றான் ஸார். போன

புதுவை சந்திரஹரி

வாரந்தான் ஸார் எனக்குக் கல்யாணம் ஆச்சு!''—இன்ஸ்பெக்டரிடம் கெஞ்சினாள்.

இன்ஸ்பெக்டர் பெரியசாமியிடம் திரும்பி, ''யோவ். இது முக்கியமான விவகாரம்யா. செத்துக்கித்துத் தொலைச்சேன்னா, இவங்க மாட்டிக்குவாங்கய்யா. உண்மையைப் பேசுய்யா...''

''ஐயா... நான் சொல்றதெல்லாம் நெஜமுங்க. வேணும்னா சாட்சிக்கு எம் மச்சான் இருக்கான். கேட்டுக்கிடுங்க.''

மச்சினன் மாரிமுத்து பெரியதாகவும் அழுத்தமாகவும் ஓர் 'ஆமாம்' போட்டான்.

வெலவெலத்துப் போனார் டாக்டர். ஸ்தம்பித்துப் போனார் இன்ஸ்பெக்டர்.

''ஏட்டய்யா. மயக்கம் வர்ற மாதிரியிருக்கு. கையெழுத்து வாங்கிக்குங்க...'' என்று பெரியசாமி சொல்லவும், நாளைதான் ஏதாவது வம்பில் மாட்டிக் கொண்டு விடப் போகிறோம் என்று நினைத்த இன்ஸ்பெக்டர், ''அவரிடம் கையெழுத்து வாங்கிடுங்க... அந்த வாக்குமூலத்திலே...'' என்று கான்ஸ்டபிளிடம் கட்டளையிட்டார்.

கையெழுத்துப் போட்டுவிட்டுப் பெரியசாமி மூர்ச்சையடைந்தான்.

''என்ன டாக்டர், இந்தப் பட்டிக்காட்டான் இப்படிப் பண்றான்?'' என்ற நர்ஸிடம், ''செத்துத் தொலைச்சிடப்போறான். ஆபரேஷன் தியேட்டரை ரெடி பண்ணுங்க. டேக் ஹிம் டு த தியேட்டர்...'' இரைந்தார் டாக்டர்.

அவசர அவசரமாகப் போன் செய்து, உதவிக்கு இரண்டு டாக்டர்களையும் வரவழைத்தார். அனைத்து வகை ரத்த பாட்டில்களும் உடனே தியேட்டருக்கு வந்து சேர வேண்டும் என்று உத்தரவிட்டார்.

மூன்று டாக்டர்களும் அரை மணி நேரம் போராடிக் குடல் வரை சென்று பதம் பார்த்திருந்த கத்தியை அகற்றி, அறுவைச் சிகிச்சை செய்து, தையல் போட்டு முடித்தார்கள். ''ஆள் திடகாத்திரமானவனாக இருந்ததாலே இவ்வளவு நேரம் தாக்குப் பிடிச்சான்...'' என்றார் சக டாக்டர்.

ஏ பிரிவைச் சேர்ந்த ஏர்கண்டிஷன் இன்டென்சிவ் கேர் வார்டில் தன் பிரத்தியேக அதிகாரத்தைப் பயன்படுத்திப் பெரியசாமிக்கு இடம் ஒதுக்கினார் டாக்டர்.

டியூட்டி நேரம் முடிந்த நர்ஸூம் கூட வீட்டிற்குப் போகாமல் பத்து நிமிடங்களுக்கு ஒரு முறை பெரியசாமியிடம் சென்று அவனது பல்ஸ், பிரஷர், டெம்பரேச்சர், சலைன் ஏறிக் கொண்டிருந்த விதம் என அனைத்தையும் கண்காணித்தபடி இருந்தாள். பெரியசாமிக்கு ஏ குரூப் ரத்தமாகிப் போனதால் பிளட் பாங்கிற்குச் சென்று அவளே தேவைப்படும் பாட்டில்களைக் கொண்டு வந்தாள்.

அடுத்த நாள் ஏ. சி. வார்டிற்கு மாற்றப்பட்டான் பெரியசாமி. பக்கத்திலேயே சோபாவை இழுத்துப் போட்டுக் கொண்டு சுகமாகப் பீடியைப் பற்றவைத்துக் கொண்டு, உட்கார்ந்து கொண்டான் மாரிமுத்து. அவனுக்கும் வேளா வேளைக்கு டிபன் சாப்பாடோடு டீயும், பீடியும் வந்து கொண்டிருந்தன. கொஞ்சம் கொஞ்சமாகத் தேறி வந்தான் பெரியசாமி. அவன் கிராமமே அணி அணியாகத் திரண்டு வந்து பெரியசாமிக்குத் தரப்படும் வசதி பந்தாக்களைப் பார்த்து அவன் ஊர் மக்களுக்கு அவன் மேல் தனி மரியாதையே ஏற்பட்டது.

தனிமையில் மாரிமுத்து கேட்டான், ''என்ன மாமா... போலீஸ்கிட்டே ஒரேயடியா அடிச்சுட்டே?''

''இல்லேன்னா என்னை அனுப்பிட்டிருப்பானுங்கடோய்...''

''நெஜந்தான் மாமா. இருந்தாலும் அந்த நர்ஸம்மா போலீஸ்லே விசாரிக்க ஆரம்பிச்சுட்டாங்கன்னு வந்து அழுவுது மாமா. புதுசாக் கல்யாணம் ஆன பொண்ணு... பாவம்!''

''பாவந்தான்...''

''டாக்டர் என்னமா உன்னைக் கவனிச்சுக்கிறார் தெரியுமா? நீ கொடுத்த வாக்குமூலம் சம்பந்தமா உங்கிட்டே என்னைப் பேசச் சொன்னார். போலீஸ் அவரைக் குடையுதாம்.''

டிஸ்சார்ஜ் ஆன பெரியசாமி, நேராக டாக்டரிடம் சென்று நன்றியைத் தெரிவித்துக் கொண்டு, மன்னிப்பையும் கோரினான். பிறகு, போலீஸுக்குச் சென்று, தான் உயிருக்குப் போராடிய நேரத்தில் தவறு செய்து விட்டதாகக் கூறி, உண்மையை ஒப்புக் கொண்டான்!

---



''பஸ்ஸில் எத்தனை கூட்டமானாலும், எனக்கு 'சீட்' நிச்சயம்...''

''வி. ஐ. பி. யா?''

''ஊகூம். டிரைவரா இருக்கேன்...!''

— ஆர். வசந்தகுமார்.



# ஒரு போஸ்ட் கார்டு போதும்!

மேலும் ஆங்கிலத்தில் பேச வேண்டும் என்ற எனது நீண்ட நாள் விருப்பம் உங்களது பயிற்சியின் மூலம் நிறைவேறும் என நம்புகிறேன். எனவே முன் கண்ட எனது முகவரிக்கு இப் பயிற்சி பற்றிய தகவல் பத்திரத்தையும் விண்ணப்ப மனுவையும் அனுப்புமாறு வேண்டுகிறேன்.

இப்படிக்கு
எம். வளர்மதி
மாரிக்கம்பட்டி.




விவேகானந்தா கல்வி நிலையம்
9 மேட்லி ரோடு
தி. நகர்
சென்னை: PIN 600017

உங்களுக்கும் உங்களது முன்னேற்றத்திற்கும் இடையில் இப்பொழுது உள்ள தூரம் ஒரு போஸ்ட் கார்டு தான் என்று நாங்கள் கூறினால் அது சற்று மிகையாகத் தோன்றும். ஆனால் உண்மை அதுதான்.

நீங்கள் வாழ்க்கையில் முன்னேறுவதற்கு ஆங்கில மொழியில் போதிய பயிற்சியின்மை ஒரு தடையாக இருந்திருந்தால்........

மற்றவர்கள் ஆங்கிலத்தில் பேசும் போது அதை ஓரளவு புரிந்து கொண்டும், அதற்கு ஆங்கிலத்திலேயே பதிலளிக்க முடியவில்லையே என்ற குறை உங்களிடம் குடி கொண்டிருந்தால்,

பல புத்தகங்களைப் படித்தும் ஆங்கிலத்தில் பேச முடியவில்லையே என்ற சலிப்பு உங்களுக்கு ஏற்பட்டிருந்தால்,

நீங்கள் எதிர்பார்க்கும் முன்னேற்றத்தை இப்பொழுது அடைய ஒரே ஒரு போஸ்ட்கார்டுபோதும்...ஆமாம்!

ஆங்கிலத்தில் இலக்கணப் பிழையின்றி கடிதங்கள் கட்டுரைகள் எழுத வேண்டும், தயக்கமின்றி சரளமாகப் பேசவேண்டும் என்ற உங்களது விருப்பத்தை ஒரு போஸ்ட் கார்டில் எழுதி தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்று போற்றப்படும் விவேகானந்தா கல்வி நிலையத் திற்கு இன்றே அனுப்புங்கள்.

நீங்கள் மேற்கொள்ள வேண்டிய பயிற்சியைப் பற்றியும் மற்ற தகவல்களையும் உடனே உங்களுக்கு அனுப்பி வைப்பார்கள்.

வீட்டிலிருந்த படியே ஓய்வு நேரத்தில் தபால் மூலம் இந்த எளிய பயிற்சி முறையை நீங்கள் மேற் கொள்ளலாம்.

"நேர்முகப்பயிற்சியும் உண்டு."

என்ன?.....எங்கே கிளம்பி விட்டீர்கள்? போஸ்ட் கார்டு வாங்கத்தானே?

உங்களது முன்னேற்றத்தின் முதல் முயற்சி துவங்கிவிட்டது.

நீங்கள் கடிதம் எழுத வேண்டிய முகவரி

---

**விவேகானந்தா கல்வி நிலையம்**
**9, மேட்லி ரோடு,**
**தி. நகர், சென்னை - 17.**

---

NAGA

# பொன்னியின் செல்வன்

## அத்தியாயம் 40

## "நான் கொன்றேன்!"

திருவாலங்காட்டுச் செப்பேடுகளில் சோழ வம்சாவளியை விவரிக்கும் போது, "வானுலகைப் பார்க்கும் ஆசையினால் ஆதித்தன் அஸ்தமனத்தை அடைந்தான். உலகில் கலி என்னும் காரிருள் சூழ்ந்தது!" என்று கூறப்பட்டிருக்கிறது. வீரபாண்டியன் தலைகொண்ட வீராதி வீரனாகிய சோழ சாம்ராஜ்யத்துப் பட்டத்து இளவரசன் ஆதித்த கரிகாலன் அகால மரணமடைந்தது பற்றித்தான் அவ்வாறு திருவாலங்காட்டுச் செப்பேட்டில் பொறிக்கப்பட்டிருக்கிறது.

ஆதித்த கரிகாலன் மரணமுற்றுக் கிடந்த கடம்பூர் அரண்மனையின் அறையில் அப்போது உண்மையாகவே காரிருள் சூழ்ந்திருந்தது.

காளாமுகத் தோற்றங் கொண்டவனால் கழுத்து நெறிபட்டுத் தரையில் தடாலென்று தள்ளப்பட்ட வல்லவரையனுடைய உள்ளத்திலும் அவ்வாறே சிறிது நேரம் இருள் குடிகொண்டிருந்தது. கொஞ்சம் கொஞ்சமாக அந்த உள்ளத்தில் ஒளி தோன்றிய போது, நினைவு வரத்தொடங்கிய போது, அவன் கண்களும் விழித்தன. ஆனால் அவனைச் சுற்றிலும் சூழ்ந்திருந்த இருளின் காரணத்தினால் அவனுடைய கண்ணுக்கு எதுவும் கோசரம் ஆகவில்லை. ஆதலின், அவன் எங்கே இருக்கிறான், என்ன நிலைமையில் இருக்கிறான் என்பதும் அவன் உள்ளத்தில் புலப்படவில்லை.

மண்டையை வலித்துக் கொண்டிருந்த உணர்ச்சி முதலில் ஏற்பட்டது. கழுத்து நெறிபட்ட இடத்திலும் வலி தோன்றியது. மூச்சு விடுவதற்குத் திணற வேண்டியிருந்ததை அறிந்தான். இந்த மண்டை வலி எப்படி வந்தது? இந்தக் கழுத்து வலி எதனால் ஏற்பட்டது? மூச்சு விடுவதற்கு ஏன் கஷ்டமாயிருக்கிறது? ஆகா! அந்தக் காளாமுகன்! அவனைத் தான் கண்டது உண்மையா? அவன் தன் கழுத்தை நெறித்துக் கொல்ல முயன்றது உண்மையா? எதற்காகக் கழுத்தை நெறித்தான்? தான் சத்தம் போடுவதைத் தடுப்பதற்காகவா? ஏன்? ஏன்? அவனுடைய இரும்புப் பிடியை மீறிக் கொண்டு தான் போக விரும்பியது எங்கே? ஆகா! நினைவு வருகிறது! ஆதித்த கரிகாலரிடம் போவதற்காக! ஐயோ! அவர் கதி என்ன ஆயிற்று? நந்தினி என்ன ஆயினாள்? ரவிதாஸன் என்ன செய்தான்? தன்னைத் தடுக்கப் பார்த்துத் தரையில் தள்ளிய காளாமுகன் பிறகு என்ன செய்திருப்பான்?...... தான் இப்போது இருப்பது எங்கே? பாதாளச் சிறையிலா? சுரங்கப் பாதையிலா? கண் விழிகள் பிதுங்கும்படியாக வந்தியத்தேவன் சுற்றுமுற்றும் உற்றுப் பார்த்தான். ஒன்றுமே தெரியவில்லை! கடவுளே! இப்படியும் ஓர் அந்தகாரம் உண்டா?......தான் விழுந்த இடம் நந்தினியின் அந்தப்புர அறையில், யாழ்க் களஞ்சியத்தின் அருகில் என்பது நினைவு வந்தது. அங்கேயே அவன் கிடக்கிறானா? அல்லது வேறு எங்கேயாவது தூக்கிக்

அமரர் கல்கி

கொண்டு போய்ப் போட்டு விட்டிருக்கிறார்களா? இதை எப்படித் தெரிந்து கொள்வது?



ரண்டு கைகளையும் நீட்டித் துழாவிப் பார்த்தான். ஒரு பொருள் கைக்குத் தட்டுப்பட்டது. அது என்ன? கத்தி போல் அல்லவா இருக்கிறது? ஆம்! கத்திதான்! இருகுமடல் உள்ள கத்தி! சாதாரணக் கத்திகளை விட மிகச் சக்திவாய்ந்தது! எவன் பேரிலாவது பாய்ந்தால் அவன் செத்தான்! இம்மாதிரி விசித்திரமான கத்தியை எங்கேயோ பார்த்தோமே? அது எங்கே? யார் கையில் பார்த்தோம்!... ஆம்! இடும்பன்காரியின் கையில் அல்லவா பார்த்தோம்! அன்று முன்னிரவில் நடந்தவையெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக நினைவுக்கு வந்தன! இந்தக் கத்தி இங்கே எப்படி வந்தது? ஓ! இதன் மடல் ஈரமாயிருக்கிறதே! ஈரம் எப்படி வந்தது? தண்ணீரா? இல்லை! எண்ணெயா? அதுவும் இல்லை! இரத்தமாகத்தான் இருக்க வேண்டும்! ஐயோ! யாருடைய இரத்தம்? ஒருவேளை தன்னுடைய இரத்தமே தானோ? வந்தியத்தேவன் தன் பின் மண்டையைத் தொட்டுப் பார்த்துக் கொண்டான். கழுத்தைத் தொட்டுப் பார்த்துக் கொண்டான். அங்கேயெல்லாம் வலித்ததே தவிர, இரத்தம் வந்ததாகத் தெரியவில்லை. உடம்பில் வேறு எங்கும் கத்திக் காயத்தின் வலி இல்லை!... பின், இந்த முறுக்குக் கத்தியின் மடல் யாருடைய இரத்தத்தைக் குடித்து விட்டு இங்கே நம் அருகில் கிடக்கிறது? இதனால் அவன் யாரையும் காயப்படுத்தவில்லை. இதற்கு முன் அவன் கையினால் அதை எடுத்ததும் இல்லை! பின்னே யார் அதை உபயோகித்திருப்பார்கள்? இடும்பன்காரியாயிருக்குமோ? அவன் யார்மேல் இதைப் பிரயோகித்திருப்பான்? ஒரு வேளை இடும்பன்காரிதான் அந்தப் பயங்கரத் தோற்றங்கொண்ட காளாமுகனின் வேடத்தில் வந்தானா? இல்லை! இல்லை! அப்படியிருக்க முடியாது! இடும்பன்காரி அவ்வளவு நெடிதுயர்ந்த உருவம் கொண்டவன் அல்ல......

இது என்ன? காலடிச் சப்தமா? யாராவது வருகிறார்களா? பேசாமல் இருக்கலாமா? குரல் கொடுக்கலாமா? வருகிறவர்கள் கையில் விளக்குடன் வரக் கூடாதோ? எங்கே இருக்கிறோம் என்றாவது தெரிந்து கொள்ளலாம் அல்லவா? இருட்டில் தெரியாமல் தன்னை மிதித்து விடப் போகிறார்களோ?......



ந்த எண்ணம் தோன்றியதும் வந்தியத்தேவன் சட்டென்று எழுந்து உட்கார்ந்தான். கையில் அந்தச் சிறிய கத்தியை ஆயத்தமாக வைத்துக் கொண்டு ''யார் அங்கே?'' என்று கேட்டான்.

அவனுடைய குரல் ஒலி அவனுக்கு அளவில்லாத வியப்பை அளித்தது. அதை அவனாலேயே அடையாளங் கண்டு கொள்ள முடியவில்லை. அவனுடைய குரலாகவே தோன்றவில்லை. அந்தக் காளாமுகன் பிடித்த பிடியினால் அவனுடைய தொண்டைக்கு இந்தக் கேடு நேர்ந்திருக்கிறது. சப்தம் வெளியில் வருவதே கஷ்டமாயிருக்கிறது.

மறுபடியும் ஒரு தடவை, ''யார் அங்கே?'' என்று உரக்கச் சப்தமிட்டுக் கேட்க முயன்றான். ஏதோ அதுவும் ஓர் உறுமல் சப்தமாக வந்ததே தவிர, குரல் ஒலியாகவே தோன்றவில்லை.

மீண்டும் காலடிச் சப்தம் விரைவாகக் கேட்டு நின்றது. வந்தவர் அவனுடைய குரலைக் கேட்டுப் பேயோ பிசாசோ என்று பயந்து வந்த வழியே திரும்பிப் போய்விட்டார் போலும்.

இதை எண்ணி வந்தியத்தேவன் சிரிக்க முயன்றான். சிரிப்புக் குரலும் அம்மாதிரி உருத்தெரியாமலேதான் ஒலித்தது.

சரி; இனி உட்கார்ந்திருப்பதிலோ, காத்திருப்பதிலோ பயனில்லை. எழுந்து நடந்து எங்கே இருக்கிறோம் என்று சோதித்துப் பார்க்க வேண்டியதுதான்.

எழுந்து நின்றான்; கால்கள் தள்ளாடின. ஆயினும் சமாளித்துக் கொண்டு நடந்தான். கைகளை எவ்வளவு நீட்டினாலும் ஒன்றும் தட்டுப்படவில்லை.

தூரத்தில் ஏதோ சிறிது பளபளவென்று தெரிந்தது. ஆகா! அது நிலைக் கண்ணாடி போல் அல்லவா இருக்கிறது? அதில் எங்கிருந்தோ மிக மெல்லிய ஒளிக்கிரணம் ஒன்று பட்டதினால் அது பளபளக்கிறது. ரவிதாஸன் கையில் புலியின் உடலை எடுத்துக் கொண்டு நுழைந்த தோற்றம் அந்த நிலைக் கண்ணாடியிலே பிரதிபலித்தது வந்தியத்தேவனின் நினைவுக்கு வந்தது. சரி, சரி! நந்தினியின் அந்தப்புர அறைக்குள்ளேதான் இன்னமும் இருக்கிறோம். ஆனால் ஏன் இங்கே இப்படி இருள் சூழ்ந்திருக்கிறது? ஏன் நிசப்தம் குடிகொண்டிருக்கிறது? இந்த அறையில் சற்று முன்னால் இருந்தவர்கள் அத்தனை பேரும் என்ன ஆனார்கள்?



இவ்விதம் எண்ணமிட்டுக் கொண்டே வந்தியத்தேவன் இருட்டில் தடுமாறிக் கொண்டு நடந்தான். வாசற்படிக்கருகில் போனால் ஒருவேளை வெளிச்சம் இருக்கலாம். — அல்லது அங்கிருந்து வெளியேறி யாரையாவது கேட்டு நடந்ததைத் தெரிந்து கொள்ளலாம் என்று எண்ணிக் கொண்டு சென்றான்.

ஏதோ காலில் தடுக்கவே மறுபடியும் தடால் என்று விழுந்தான். ஆனால் இம்முறை ஏதோ மிருதுவான பொருளின் மீது விழுந்தபடியால் பலமாக அடிபடவில்லை. அந்த மிருதுவான பொருள் புலியின் தோல் என்று தெரிந்தது. ரவிதாஸன் கையில் எடுத்துக் கொண்டு வந்து எறிந்த புலித் தோல் மீது அவன் விழுந்திருக்க வேண்டும்....

தடுமாறி விழுந்த போது கையிலிருந்த கத்தி நழுவிவிட்டது; அதைக் கண்டு பிடித்து எடுத்துக் கொள்வதற்காகக் கையை நீட்டித் துழாவினான். கையில் மிருதுவாக ஏதோ தட்டுப்பட்டது. வந்தியத்தேவனுடைய உடம்பெல்லாம் நடுங்கியது. ரோமங்கள் குத்திட்டு நின்றன; நெஞ்சில் பீதி குடிகொண்டது.

அப்படியும் இருக்க முடியுமா என்று எண்ணிக் கொண்டே, மறுபடியும் தடவிப் பார்த்தான்.

ஆம்; அது ஒரு மனித உடல்தான்! அவன் கையில் தட்டுப்பட்டது அந்த மனிதனின் உள்ளங்கை! புலித் தோலை உடனே அகற்றித் தூர எறிந்தான். பிறகு உற்றுப் பார்த்தான். கண்ணாடியில் விழுந்த இலேசான ஒளி பிரதிபலித்துக்கீழேகிடந்தஉடலையும் சிறிது புலப்படுத்தியது. ஐயோ!

இளவரசர் ஆதித்த கரிகாலர் அல்லவா கிடக்கிறார்? அவர் அல்ல! அவருடைய உயிர் அற்ற உடல்தான் கிடக்கிறது?

வந்தியத்தேவனுடைய நெஞ்சு விம்மித் தொண்டையை அடைத்துக் கொண்டது. கண்களில் அவனை அறியாமல் கண்ணீர் ததும்பியது.



நடுநடுங்கிய கைகளினால் கரிகாலருடைய உடம்பின் பல பகுதிகளையும் தொட்டுப் பார்த்தான். சிறிதும் சந்தேகத்துக்கு இடம் இல்லை. உயிர் சென்று விட்ட வெறுங்கூடுதான்!

அந்த உயிரற்ற உடம்பின் விலாப் பக்கத்திலிருந்து பெருகிப் பக்கத்தில் வழிந்திருந்த இரத்தம் அவனுடைய கைகளை நனைத்தது.

அச்சமயம் அவனுக்குக் குந்தவைப் பிராட்டியின் நினைவு உண்டாயிற்று. அந்த மாதரசி அவனை எதற்காக அனுப்பி வைத்தாளோ, அந்தக் காரியத்தில் அவன் வெற்றி அடையவில்லை. முழுத் தோல்வி அடைந்தான்! இனி அவள் முகத்தில் விழிப்பது எங்ஙனம்?

அவனால் எவ்வளவு பிரயத்தனம் செய்ய முடியுமோ, அவ்வளவும் செய்தாகி விட்டது. ஆனாலும் பயன்படவில்லை. விதி வென்று விட்டது!

இளவரசரின் உயிரற்ற உடலை எடுத்துத் தன்னுடைய மடியிலே போட்டுக் கொண்டான். மேலே என்ன செய்வது என்று தெரியவில்லை. சிந்திக்கும் சக்தியையே இழந்து விட்டான். சப்தம் போட்டு அலறுவதற்குத் தொண்டையிலும் சக்தி இல்லாமற் போய்விட்டது.

''இளவரசர் இறந்துவிட்டார்; ஒப்புக் கொண்ட காரியத்தில் நாம் வெற்றி பெறவில்லை; குந்தவையின் முகத்தில் இனி விழிக்க முடியாது!'' என்னும் இந்த எண்ணங்களே திரும்பத் திரும்ப அவன் மனத்தில் வந்து கொண்டிருந்தன.

இவ்வாறு எண்ணிக் கொண்டு அவன் எத்தனை நேரம் அங்கே உட்கார்ந்திருந்தான் என்பது அவனுக்கே தெரியாது.

தீவர்த்தி வெளிச்சத்துடன் மனிதர்கள் சிலர் அந்த அறையை நெருங்கி வருகிறார்கள் என்பதைக் கண்ட பிறகுதான் அவனுக்கு ஓரளவு சுய நினைவு வந்தது.

கரிகாலருடைய உடலைத் தன்னுடைய மடியிலிருந்து எடுத்துக் கீழே வைத்து விட்டு எழுந்து நின்றான்.

பத்துப் பன்னிரண்டு ஆட்கள் முன் வாசற் பக்கமிருந்து வந்தார்கள். அவர்களில் இருவர் தீவர்த்தி பிடித்துக் கொண்டிருந்தார்கள். மற்றும் சிலர் வேல் ஏந்திக் கொண்டு வந்தார்கள்.

எல்லாருக்கும் முன்னால் கந்தமாறனும் அவனுக்கு அடுத்தாற்போல் பெரிய சம்புவரையரும் வந்தார்கள்.

வந்தவர்கள் எல்லாருடைய முகங்களும் பயப்பிராந்தியைக் காட்டின. தீவர்த்தி வெளிச்சத்தில் பேயடித்தவர்களைப் போல் காணப்பட்டார்கள்.

கந்தமாறனுடைய முகத்திலே மட்டும் கோபமும் ஆத்திரமும் கொந்தளித்துக் கொண்டிருந்தன.

அவன் வந்தியத்தேவனைப் பார்த்ததும் ''அடே பாதகா! கொலைகாரா! சிநேகத் துரோகி! இராஜத் துரோகி! நீ தப்பித்துக்

கொண்டு ஓடவில்லையா! போய் விட்டாய் என்றல்லவா நினைத்தேன்?'' என்று கர்ஜனை செய்தான்.

பின்னர் பெரிய சம்புவரையரை நோக்கி, ''தந்தையே! அதோ பாருங்கள் கொலைகாரனை! சிநேகிதன் போல் நடித்துப் பாதகம் செய்த பழிகாரனைப் பாருங்கள்! நம்முடைய வம்சத்துக்கு அழியாத களங்கத்தை உண்டு பண்ணிய சண்டாளனைப் பாருங்கள்! அவன் முகத் தோற்றத்தைப் பாருங்கள்! அவன் செய்த பயங்கரக் குற்றம் அவன் முகத்திலேயே எழுதியுள்ளதைப் போல் பிரதிபலிப்பதைப் பாருங்கள்!'' என்றான்.

சம்புவரையர் அதற்கெல்லாம் மறுமொழி ஒன்றும் சொல்லாமல் கீழே கிடந்த ஆதித்த கரிகாலனுடைய



உடலை அணுகினார். அதன் தலைமாட்டில் உட்கார்ந்து, சிறிதுநேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு, ''ஐயோ! விதியே! இது என் வீட்டிலா நேர வேண்டும்? விருந்துக்கு என்று அழைத்து வேந்தனைக் கொன்ற பழி என் தலையிலா சுமர வேண்டும்?'' என்று புலம்பிக் கொண்டே தமது தலையில் படார், படார் என்று அடித்துக் கொண்டு புலம்பினார்.

கந்தமாறன், ''தந்தையே! நம் குலத்துக்கு அந்தப் பழி ஒரு நாளும் வராது! இதோ கொலைகாரனைக் கையும் மெய்யுமாய்ப் பிடித்திருக்கிறோம்! இவன் இளவரசரைக் கொல்வதற்கு உபயோகித்த கத்தி அதோ கிடப்பதைப் பாருங்கள்! அதில் இரத்தம் தோய்ந்திருப்பதைப் பாருங்கள்! முன்னால் நான் வந்து பார்த்த போது இவன் இல்லை. கத்தியும் இல்லை. ஓடப் பார்த்து முடியாமல் திரும்பி வந்து விட்டான்! ஒருவேளை இளவரசர் உடம்பில் உயிர் ஒட்டிக் கொண்டிருக்கிறதோ என்று பார்க்க வந்தான் போலும்! தந்தையே! இப்பேர்ப்பட்ட மகா பாதகனுக்கு – சதிகாரத் துரோகிக்கு, — என்ன தண்டனை கொடுப்பது? எது கொடுத்தாலும் போதாதே?'' என்று கந்தமாறன் பேசிக் கொண்டே போனான்.

வந்தியத் தேவன் ஏற்கெனவே தொண்டை நெறிந்து பேச முடியாதவனாயிருந்தான். கந்தமாறனுடைய வார்த்தைகள் அவனைத் திக்பிரமை கொள்ளச் செய்தன. தன்னைப் பிறர் கொலைகாரனாகக் கருதக் கூடிய நிலையில் அவன் இருப்பது அப்போதுதான் அவனுக்குத் தெரிய வந்தது. இளவரசனைக் குத்திக் கொன்ற குற்றத்தையல்லவா இந்தக் கந்தமாறன் தன்மீது சுமத்துகிறான்? முன்னே இவன் முதுகில் நான் கத்தியால் குத்தியதாகச் சொன்னான். இப்போது இளவரசரை நான் கொன்று விட்டதாகவே சொல்கிறான்! நம் நிலை அப்படி இருக்கிறது! யாரும் சந்தேகிக்கக்கூடியதாக இருக்கிறது! ஆகா! அந்தப் பழுவூர் மோகினி, — அழகே வடிவான விஷப் பாம்பு, — இதற்காகவே திட்டமிட்டிருந்தாள் போலும்! இதற்காகவே தன்னைச் சில முறை காப்பாற்றினாள் போலும்! குந்தவைப் பிராட்டியின் பேரில் இவளுக்கு உள்ள குரோதத்தை இவ்விதம் தீர்த்துக் கொண்டாள்! ஆகா! அந்தச் சௌந்தரிய வடிவங் கொண்ட பெண் பேய் எங்கே? எப்படித் தப்பித்தாள்? காரியம் முடிந்ததும் மந்திரவாதி ரவிதாஸன் முதலியவர்களோடு சுரங்க வழியில் தப்பி ஓடிவிட்டாள்



போலும்!......

இவ்வாறு எண்ணமிட்ட வந்தியத்தேவன் சிந்தனை சட்டென்று இன்னொரு பக்கம் திரும்பியது! ஆதித்த கரிகாலரைத் தான் கொல்லவில்லையென்பது நிச்சயம். ஆனால் வேறு யார் கொன்றிருப்பார்கள்? நந்தினியா? அல்லது ரவிதாஸனா? அல்லது காளாமுகனா? — ஒருவேளை தான் நினைவு மறக்கும் தறுவாயில் ஒரு கணம் தோன்றி மறைந்த மணிமேகலையாகத்தான் இருக்குமோ? அல்லது இந்த முறுக்குக் கத்தியை எடுத்து வந்தவனான இடும்பன்காரியாக இருக்குமோ? ஒருகால், கந்தமாறனே தான் நந்தினி மேல் கொண்ட மோகத்தினால் இந்தப் படுபாதகத்தைச் செய்து விட்டு நம் பேரில் பழியைப் போடுகிறானா? அல்லது நந்தினி சொல்லிய அதிசயமான இரகசியத்தைக் கேட்டு விட்டுத் தன்னைத் தானே நொந்து கொண்ட ஆதித்த கரிகாலர் தற்கொலை செய்து கொண்டு இறந்தாரா?

கந்தமாறன், தன் பக்கத்தில் நின்ற ஆட்களைப் பார்த்து, "தடியார்களே! ஏன் சும்மா நிற்கிறீர்கள்? இந்தக் கொலை காரனைப் பிடித்துக் கட்டுங்கள்!" என்று கத்தியதுந்தான் வந்தியத் தேவனுக்குத் தனது இக்கட்டான நிலைமை மறுபடியும் ஞாபகத்துக்கு வந்தது.



ந்தமாறனை அவன் இரக்கமும் துயரமும் ததும்பிய கண்களினால் பார்த்தான். ஒரு பெரு முயற்சி செய்து தொண்டையில் ஜீவனைத் தருவித்துக் கொண்டு, "கந்தமாறா! இது என்ன? நான் இத்தகைய கொடுஞ் செயலைச் செய்திருப்பேன் என்று நீ நம்புகிறாயா? எதற்காக நான் செய்ய வேண்டும்? எனக்கு என்ன லாபம் இதனால்? நண்பா!...." என்பதற்குள் கந்தமாறன், "சீச்சீ! நான் உன் நண்பன் அல்ல. அவ்விதம் கூறிய உன் நாவை அறுக்க வேண்டும். உனக்கு என்ன லாபம் என்றா கேட்கிறாய்? ஏன் லாபம் இல்லை? நந்தினியின் கடைக்கண் கடாட்சத்தைப் பெறலாம் என்ற ஆசை தான்! அடே! அந்தப் பழுவூர் மோகினி இப்போது எங்கே?" என்றான்.

"கந்தமாறா! உண்மையில் எனக்குத் தெரியாது. நான் இங்கே நினைவிழந்து கிடந்தேன். நீங்கள் வருவதற்குச் சற்று முன்புதான் நினைவு பெற்றேன். நந்தினி என்ன ஆனாள் என்று எனக்குத் தெரியாது. ஒரு வேளை சுரங்கப் பாதை வழியாக வெளியேறியிருக்கலாம். வேட்டை மண்டபத்தில் அவளுடைய ஆட்கள், — வீரபாண்டியனுடைய ஆபத்துதவிகள், — நாலு பேர் காத்திருந்தார்கள். அவர்களுடன் நந்தினி போயிருக்கலாம்!"

கந்தமாறன், "ஓகோ! உன்னையும் ஏமாற்றி விட்டுப் போய் விட்டாளாக்கும். ஆனால் உனக்கு ஒன்றும் தெரியாது என்று சாதிக்க வேண்டாம். அதை யார் நம்புவார்கள்? நீ அவளுடைய மோக வலையில் விழுந்திருந்தாய். காலால் இட்ட காரியத்தைத் தலையினாலே முடிப்பதற்குத் தயாராய் இருந்தாய் என்பது எனக்குத் தெரியாதா? ஆதித்த கரிகாலரே சொல்லியிருக்கிறார். நந்தினியும் அவரிடத்தில் உன்னைப் பற்றிய உண்மையைச் சொல்லியிருக்கிறாள். அவள் தூண்டியோ, அவளுக்குத் திருப்தி தரும் என்று நினைத்தோ, நீ இந்தக் கொலை பாதகத்தைச் செய்து விட்டாய்! உன்னுடைய முகத்தில் விழித்தாலும் பாவம்!" என்றான்.

"கந்தமாறா! சத்தியமாகச் சொல்லுகிறேன். நான் இளவரசரைக் கொல்லவில்லை. அவர் உயிரைக் காப்பாற்றும் பொறுப்பைப் பழையாறை இளைய பிராட்டியிடம் நான் ஏற்றுக் கொண்டு வந்தேன்..."

"இவ்விதம் சொல்லித்தான் இளவரசரை ஏமாற்றினாய்! பிறகு வஞ்சகம் செய்து குத்திக் கொன்றாய்! இல்லாவிட்டால், இந்த அறைக்குள் எப்படி வந்து சேர்ந்தாய்? எதற்காக வந்தாய்?"

"கந்தமாறா! இளவரசருக்கு ஆபத்து வரப் போவதையறிந்து அவரைப் பாதுகாக்க வந்தேன். அந்த முயற்சியில் தோற்றுப் போனேன். ஆனால் அது என் குற்றம் இல்லை. உன் தங்கை மணிமேகலையை வேணுமானால் கேட்டுப் பார்! அவள் தான் என்னை......'

"சீச்சீ! என் தங்கையைப் பற்றிப் பேசாதே! அவள் பெயரையே சொல்லாதே! ஜாக்கிரதை! இனி அவள் பேச்சை எடுத்தால் தெரியுமா? உன் கழுத்தைப் பிடித்து நெறித்து இப்பொழுதே கொன்று விடுவேன்!"



வ்விதம் கூறி விட்டுக் கந்தமாறன் வந்தியத்தேவன் மீது பாய்ந்து அவன் மார்பையும் தோள்களையும் சேர்த்துப் பிணைத்திருந்த கயிறுகளைப் பிடித்து ஒரு குலுக்குக் குலுக்கினான்.

பின்னர், கீழே ஆதித்த கரிகாலன் உடலுக்கருகில் உட்கார்ந்து வேதனையில் ஆழ்ந்திருந்த சம்புவரையரைப் பார்த்து "தந்தையே! இவனை என்ன செய்கிறது என்று சொல்லுங்கள்! நம் குலத்துக்கு அழியா அபகீர்த்தியை உண்டு பண்ணிய இந்தக் கொலை பாதகனை என்ன செய்கிறது என்று சொல்லுங்கள்! தாங்கள் அநு

மதி கொடுத்தால் இவனை இந்த நிமிடமே கண்ட துண்டமாக்கிப் போடுகிறேன்! தந்தையே! சொல்லுங்கள்!'' என்று கத்தினான்.

கரிகாலனுடைய உடலைத் தடவிப் பார்த்துக் கொண்டு பிரமை பிடித்தவர் போல் உட்கார்ந்திருந்த சம்புவரையர் கந்தமாறனுடைய கூச்சலைக் கேட்டு அண்ணாந்து பார்த்தார்.

அவருடைய பார்வை கந்தமாறனுக்கு அப்பால் சென்றது. அந்த அறையிலேயிருந்த கட்டில் திரைச் சீலை அசைந்ததைக் கண்டார். மறுகணம் அத் திரைச் சீலையை விலக்கிக் கொண்டு ஓர் உருவம் வெளிப்படுவதைப் பார்த்தார். கண்களில் நீர் ததும்பியிருந்த காரணத்தினால் திரைச் சீலையிலிருந்து வெளிப்பட்டு வந்தது யார் என்பதை அவர் உடனே தெரிந்து கொள்ளவில்லை. இன்னும் சிறிது அருகில் அந்த உருவம் வந்ததைக் கண்டதும் அவள் தனது செல்வக் குமாரி மணிமேகலை என்பதை அறிந்து கொண்டார். அதனால் அவருக்கு ஏற்பட்ட வியப்பும் அருவருப்பும் வேதனையுடன் கலந்து முகத்தில் தோன்றின.

''மணிமேகலை! நீ எப்படி இங்கே வந்தாய்?'' என்று அவர் கேட்ட வார்த்தைகள். கந்தமாறனையும் திரும்பிப் பார்க்கும்படி செய்தன.

''அப்பா! நான் இங்கேயே தான் இருந்தேன். அவரை ஒன்றும் செய்ய வேண்டாம் என்று அண்ணனுக்குச் சொல்லுங்கள். அவர் பேரில் குற்றம் ஒன்றுமில்லை!'' என்றாள்.

கந்தமாறன் ''அப்பா! பார்த்தீர்களா? இந்தப் பாதகன் எப்படி என் தங்கையின் மனத்தைக் கெடுத்திருக்கிறான், பார்த்தீர்களா? இவன் பேரில் குற்றம் ஒன்றும் இல்லையாமே?'' என்று சீறிக் கொண்டே சிரித்தான்.

''ஆம், அண்ணா! நிச்சயமாக இவர் பேரில் குற்றம் ஒன்றுமில்லை!'' என்று மணிமேகலை உறுதியாகக் கூறினாள்.

கந்தமாறனை ஒரு பக்கம் ஆத்திரமும் இன்னொரு பக்கம் வெட்கமும் சேர்ந்து பிடுங்கித் தின்றன.

''தங்காய்! வாயை மூடிக் கொள்! உன்னை யார் இங்கே அழைத்தார்கள்? நீ இங்கே வந்திருக்கவே கூடாது. உன் புத்தி சுவாதீனத்தில் இல்லை. உடனே முன் கட்டுக்குப் போ! மற்ற பெண்கள் உள்ள இடத்துக்குப் போ!'' என்று கத்தினான் கந்தமாறன்.

''இல்லை, அண்ணா! என் புத்தி சுவாதீனத்திலேதான் இருக்கிறது. உன் புத்தி தான் கலங்கிப் போயிருக்கிறது. இல்லா

## அருள்வாக்கு



கோயில் பெரிய பரப்பளவில் கட்டப்பட்டதால் அதற்குள்ளேயே காலேஜ் ஸ்தானத்திலிருந்த உயர் கல்வி நிலையங்களை அமைக்க வசதி ஏற்பட்டது. சிதம்பரம், தஞ்சாவூர் முதலான கோயில்களில் இப்போது பார்த்தாலும் தெரியும் — அவற்றில் வெளி மதிலை ஒட்டினாற் போல கோயிலுக்கு உட்புறமாகவே இரட்டை மாடிக் கட்டுமானங்கள் நிறைய இருக்கும். இவை பத்தாம் நூற்றாண்டிலிருந்து பன்னிரண்டாம் நூற்றாண்டு வரையில் சோழ ராஜாக்கள் ''திருச் சுற்று மாளிகை'' என்ற பெயரில் நிர்மாணித்தவை. இதிலே தான் வித்யா சாலைகள் நடந்தன. அதோடு லைப்ரரி மாதிரியான ''ஸரஸ்வதி பண்டாரம்'' என்பவையும் திருச்சுற்று மாளிகையில் இடம்பெற்றன. அவற்றில் நூல் சுவடிகளையெல்லாம் சேகரித்து, ப்ரதிகள் எடுத்து, பத்திரமாகப் பாதுகாத்து, வித்யார்த்திகளுக்கும் ஆசிரியர்களுக்கும் கொடுத்து உபகரித்து வந்தார்கள். பண்டாரம் என்றால் ''ஸ்டோர்'' என்பது போல் பண்டங்களைச் சேர்த்து வைக்கிற இடம்.

கோயிலுக்குள் நடந்த வித்யா சாலைகள் என்பதால் அவற்றில் ஸமயக் கல்வி மட்டும் தான் போதிக்கப்பட்டதாக நினைக்க வேண்டாம். 'க்ராமருக்கு' என்றே தனி மண்டபம் கோயிலில் இருந்தது. ஸெக்யுலர் (உலகியல் சாஸ்திரங்கள் குறித்த) படிப்பு என்றாலும் அதையும் கூட ஈச்வரனையும் ஸமயாசாரங்களையும் மறந்து ப்ரயோஜனப் படுத்துவதற்கில்லையல்லவா? இந்த ப்ரக்ஞையை நன்றாக உண்டாக்குகிற ரீதியில் தான் 'ஜெனரல் எஜுகேஷனுக்கு' (பொதுக் கல்விக்கு) ஏற்பட்ட கலாசாலைகள் ஆலய எல்லைக்குள்ளேயே நடத்தப்பட்டன. அவற்றில் ஆயுர்வேதம் முதலானவையும் கற்பிக்கப்பட்டதற்குச் சான்றுகள் இருக்கின்றன — அக்கால மெடிக்கல் காலேஜ்!

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.



சர்வர்: சார்! எங்க முதலாளி நீங்க 'பில்'லுக்குக் 'காசு' தர வேண்டாங்கிறார்.

சாப்பிடுபவர்: ஏம்ப்பா!

சர்வர்: போன வாரம் பில்லுக்குக் காசில்லாமல் நீங்க அரைத்த மாவில் சுட்ட இட்லி ரொம்ப அருமையா இருந்துச்சாம்!

— எஸ். ப்ரியதர்சினி

[redacted]

விட்டால் இவர் இளவரசரைக் கொன்றதாக நீ குற்றம் சாட்டியிருக்க மாட்டாய்!'' என்றாள் மணிமேகலை.

கந்தமாறன், ''அறிவு கெட்டவளே! இந்தக் கொலை பாதகனுக்கு நீ ஏன் பரிந்து பேசுகிறாய்?'' என்றான்.

''அவர் கொலைபாதகர் அல்ல; அத்தான்தான்!'' என்றாள் மணிமேகலை.

கந்தமாறன் ஆத்திரச் சிரிப்புடன், ''இவன் கொலைபாதகன் இல்லை என்றால், பின்னே யார்? இளவரசரைக் கொன்றது யார்? நீ கொன்றாயா?'' என்றான்.

**''ஆம்! நான்தான் கொன்றேன்! இந்த வாளினால் கொன்றேன்!''** என்றாள் மணிமேகலை.

இந்த வார்த்தைகளைக் கேட்டு அங்கேயிருந்தவர்கள் அவ்வளவு பேரும் திகைத்துப் போனார்கள். அவர்கள் ஒருவர் முகத்தை ஒருவர் வியப்புடன் பார்த்துக் கொண்டார்கள்.



ரு கண நேரத் திகைப்புக்குப் பிறகு கந்தமாறன் வந்தியத்தேவனை விட்டு விட்டு மணிமேகலையண்டை பாய்ந்து ஓடினான். அவள் கையிலிருந்த வாளைப் பிடுங்கிக் கொண்டான். அதன் நுனியை உற்றுப் பார்த்தான்.

''அப்பா! இதைக் கேளுங்கள். இவளால் இந்த வாளைத் தூக்கவே முடியவில்லை. இவன் இதனால் இளவரசனைக் கொன்றதாகச் சொல்லுகிறாள். இது இளவரசர் உடம்பில் பாய்ந்திருந்தால், திரும்ப இவளால் எடுத்திருக்க முடியுமா? இதன் நுனியில் பாருங்கள்! சுத்தமாய்த் துடைத்தது போலிருக்கிறது! வல்லவரையனைக் காப்பாற்றுவதற்காக இப்படிச் சொல்லுகிறாள்! இவன் பேரில் இவளுக்கு ஏன் இவ்வளவு அக்கறை? அவ்வளவு தூரம் இவளுடைய மனத்தை இந்தப் பாதகன் கெடுத்து விட்டிருக்கிறான். மாய மந்திரம் போட்டு மயக்கி விட்டிருக்கிறான்! அவனுடைய முகத்தைப் பாருங்கள்! அவன் செய்த குற்றம் அவன் முகத்திலேயே எழுதியிருப்பதைப் பாருங்கள்!'' என்றான்.

உண்மையிலேயே வந்தியத் தேவன் முகத்தில் வியப்பும் திகைப்பும் வேதனையும் குடி கொண்டிருந்தன. இத்தனை நேரம் மௌனமாயிருந்தவன் இப்போது வாய் திறந்து, ''கந்தமாறா! நீ சொல்வது உண்மைதான்! நான்தான் குற்றவாளி. உன் சகோதரி என்னைக் காப்பாற்றுவதற்காகவே இப்படிக் கற்பனை செய்து சொல்லுகிறாள்! இளவரசி! தங்களுக்கு நன்றி! என் உடலிலிருந்து உயிர் பிரிந்த பிறகும் தாங்கள் என்னிடம் வைத்த சகோதர பாசத்தை மறக்க மாட்டேன். ஆனால், தங்கள் தமையன் சொல்வதை இப்போது கேளுங்கள்! அந்தப்புரத்துக்குப் போய் விடுங்கள்!'' என்றான்.

இதைக் கேட்ட கந்தமாறனுடைய குரோதம் சிகரத்தை அடைந்தது. முன்னமே சிவந்திருந்த அவன் கண்கள் இப்போது அனலைக் கக்கின.

''அடே! எனக்காக நீ சிபார்சு செய்யும் நிலைமைக்கு வந்து விட்டதா? நான் சொல்லிக் கேட்காதவள் நீ சொல்லித்தான் கேட்பாளா? இவள் உன்னிடம் அவ்வளவு சகோதர வாஞ்சை வைத்திருக்கிறாளா? இவள் என்னுடன் பிறந்தவளா? உன்னோடு பிறந்தவளா? என்னைக் காட்டிலும் உன்னிடம் இவளுக்கு மரியாதை அதிகமா? அது ஏன்? என்ன மாய மந்திரம் செய்து இவள் மனத்தை அவ்விதம் கெடுத்து விட்டிருக்கிறாய்? உன்னை நான் கொல்லுவதற்கு இதுவே போதுமே! இதோ, உன்னை யமனுலகம் அனுப்பிவிட்டு மறு காரியம் பார்க்கிறேன்! உன் அருமைச் சகோதரி கையில் வைத்திருந்த வாளினாலேயே உன்னைக் கொல்லுகிறேன்; அது உனக்கு மகிழ்ச்சி தரும் அல்லவா?''

இவ்வாறு கத்திக்கொண்டே கந்தமாறன் வாளை ஓங்கிக்கொண்டு வந்தியத் தேவன் மீது பாய்ந்தான்.

(தொடரும்)



பாடசாலை வித்யார்த்திகளின் ஒரு பகுதி.

மஹான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதரவர்களால், 1542 – இல் ஸ்தாபிக்கப்பட்டு, தொடர்ந்து நடந்து வரும் வேத பாடசாலையை ஸமிதியானது தாய் போல் இயங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 90 மாணாக்கர்கள் வேதாத்யயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஒரு நாள் உணவளிக்க, உணவு வகையினை அனுசரித்து சுமார், முறையே ரூ. 250/- அல்லது 300/- அல்லது 500/- ஆகிறது. இந்தத் தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ. 2500/- அல்லது 3000/- அல்லது 5000/- மூலதனம் ஏற்படுத்தியோ, அவ்வப்போது தொகை அனுப்பியோ, ஒரு குறிப்பிட்ட தினத்தில் உணவளிக்கும் கைங்கர்யத்தில் பங்கு கொள்ளக் கோருகிறோம். நன்கொடை அனுப்பவேண்டிய பெயரும் முகவரியும்:

**அத்வைத வித்யாசார்யா மஹாராஜா ஸாஹேப் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி,**
**D – 76, மூன்றாவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி,**
**கும்பகோணம் – 612 001.**

**** இந்த நன்கொடைக்கு 80-G விதியின்படி வருமான வரிவிலக்கு உண்டு ****

# உங்கள் குழந்தைக்கு
# அளியுங்கள் ஸெரிலாக் அனுகூலம்



## திட உணவின் தொடக்கத்திலிருந்தே

உங்கள் குழந்தைக்கு நான்காம் மாதத்திலிருந்தே பாலோடு திட உணவும் தேவை. அப்போது ஸெரிலாக் அனுகூலம் அளியுங்கள்.

**போஷாக்கு அனுகூலம்:** ஒவ்வொரு முறை ஸெரிலாக் மட்டும் போதும். புரதச்சத்து, கார்போஹைட்ரேட், கொழுப்பு, வைட்டமின், மற்றும் தாதுப் பொருட்கள் ஆகிய எல்லா போஷாக்குச் சத்துக்களும் சரியான விகிதத்தில் உங்கள் குழந்தைக்குக் கிடைக்கிறது.

**சுவை அனுகூலம்:** ஸெரிலாக் சுவையில் குழந்தைகளுக்குக் கொள்ளை ஆசை.

**தயாரிப்பதில் அனுகூலம்:** ஸெரிலாக் ஏற்கனவே பதமாக்கப்பட்டது; பாலும் சர்க்கரையும் கலந்தது. காய்ச்சி ஆறிய நீரில் கலந்தாலே போதும்.

**தேர்ந்தெடுக்க அனுகூலம்:** இப்போது ஸெரிலாக், மூன்று வெவ்வேறு வகைகளில்!

சுகாதாரமான முறையில் தயாரிக்கவும், சரியான விகிதத்தில் போஷாக்கு கிடைக்கவும் டின்னில் தரப்பட்டுள்ள குறிப்புகளை தயவு செய்து பின்பற்றுங்கள்.




இலவசம்
ஸெரிலாக் பேபி கேர் புத்தகம்
எழுதுங்கள்: ஸெரிலாக்,
தபால் பெட்டி எண். 3
புது தில்லி-110008




**ஸெரிலாக் பராமரிப்பு: முழுமையான போஷாக்கு, சிறப்பான சுவை**

RK SWAMY/FSL/5112/TAM

# கடமை, கண்ணியம், கட்டுப்பாடு

மத்திய அரசின் சகல பந்தாக்களும் நிரம்பிய கஸ்டம்ஸ் கலெக்டர் அலுவலகம், அன்று இலக்கிலிருந்து விடுபட்ட ராக்கெட்டைப் போல, ஓர் அசாத்தியச் சுறுசுறுப்புடன் இயங்கியது. விசாலமான ஏ. ஸி. அறையில், சுகமாக அமர்ந்து, இதமாகச் சிகரெட் பிடித்துக் கொண்டிருந்த கஸ்டம்ஸ் கலெக்டர் ஆல்பெர்ட்டின் சிந்தனை ஓட்டம், மென்மையான பஸ்ஸர் ஒலி கேட்டு நின்றது. அனுமதியுடன் உள்ளே நுழைந்த, வாட்டசாட்டமான, கம்பீர உருவத்தைக் கண்கொட்டாமல் கவனித்தார் ஆல்பெர்ட். இரும்போ என வியக்க வைக்கும் ஆறு அடி உயர உடலமைப்பு. சீராக டிரிம் செய்யப்பட்ட அடர்த்தியான மீசை. கருணை, உறுதி இரண்டும் கலந்த கண்கள். அதிகாரிகளுக்கு உரிய சீருடையில், மிலிடரி நடையில் நுழைந்து, சல்யூட் அடித்த துணைக் கலெக்டர் டேவிட்டைக் கண்டதும், கலெக்டரின் முகம் சற்றுக் கடுகடுப்பாகியது.

''இரண்டாவது முறையும் மதுரையில் நடைபெற்ற, மிகப் பெரிய தங்கக் கடத்தலைக் கண்டுபிடிக்க முடியாத எனது தோல்வியை, ஒப்புக் கொள்கிறேன். அதற்கு முன், எனது ஒரு சில சந்தேகங்களை நேரடியாக உங்கள் முன்னிலையில் விவாதிக்க விரும்புகிறேன்,'' என்றார் டேவிட்.

கலெக்டரின் குரல் சற்றுக் கடுமையாக வெளிப்பட்டது. ''டேவிட் நான் எந்த விளக்கத்தையும் உங்களிடம் விவாதிக்க விரும்பவில்லை. சென்ற முறை, விமான டாய்லெட்டில் வைத்து, கோடிக்கணக்கான தங்கப் பிஸ்கட்டுகள் கடத்தப்பட்டுள்ளன. நாம் எடுத்த தடுப்பு முயற்சிகள் அனைத்தையும், மிகத் திறமையாக உடைத்து விட்ட அவர்களுக்கு, யாரோ நமது துறையிலிருந்து, ஒரு சில ஐந்தாம் படைகள் உளவு கூறி விட்டார்கள் என நீங்கள் விளக்க விரும்பினால், அதற்கான எந்த ஆதாரங்களும் நம்மிடம் இல்லை. இந்த முறியடிப்பு ஆபபரேஷனில் ஈடுபட்ட அனைத்து அதிகாரிகளும், நமது நம்பிக்கைக்கு உரியவர்கள். அனைவரும் தங்கள் சேவைக்காக ஜனாதிபதி பரிசு பெற்றவர்கள். எனவே இவர்கள் யாரையும் என்னால் எளிதில் சந்தேகிக்க முடியாது.''

கலெக்டரின் குரல் சற்று அமைதி அடைந்ததும், டேவிட் கனீர் எனப் பேசினார். ''சார்! என்னை மன்னியுங்கள்! நான் யாரையும் குறிப்பிட்டுக் குற்றம் சாட்ட விரும்பவில்லை. ஒரு குறிப்பிட்ட நபர் மீது என்னையறியாமல் என் மனத்துக்குள் ஒரு சிவப்பு சிக்னல். அந் நபரின் நிழல் மட்டுமே தெரிகிறது. அவர் முகம் சரியாகப் பிடிபடவில்லை. இந் நிலையில், உங்களுக்கு என்னால் மேற்கொண்டு உதவ முடியும் என்று தோன்றவில்லை. என்னை மன்னியுங்கள்.''

உடனே கலெக்டர் எழுந்து டேவிட்டின் கைகளைப் பற்றினார். எதிர் சீட்டில் டேவிட்டை அமரும்படி கூறினார். ''டேவிட் உங்களிடம் மிகக் கடுமையாக நடக்க வேண்டிய சூழ்நிலையில் நான் தள்ளப்பட்டிருக்கிறேன். இந்த ஆண்டின் மிகப் பெரிய தங்கக் கடத்தல் வரும் ஜூலை 5 ஆம் தேதி தரை மார்க்கமாக, பெங்களூர், மதுரை ரூட்டில் நடைபெற உள்ளது என்ற, மிக நம்பகமான செய்தி, எனக்குக் கிடைத்திருக்கிறது. இச் செய்தி, இம்முறை நேராக எனக்கு அனுப்பப்பட்டிருக்கிறது. உங்களைத் தவிர, இது வேறு யாருக்கும் தெரிய வாய்ப்பில்லை. எனவே, இவர்களின் திட்டங்களை முறியடித்து, மதுரையில் புதிதாக முளைத்துள்ள, இக் கடத்தல் வழியை அடைத்தே ஆக வேண்டும். அதற்கு உங்களை விடத் தகுதியான ஆள், நமது துறையில் யாருமில்லை. இதற்காக உங்களுக்கு என்ன வசதி வேண்டுமானாலும் செய்து தரத் தயாராய் இருக்கிறேன். எனக்கு வேண்டியது, கடத்தல் தங்கமும், அதன் பின்னணியும்தான். வேறு எந்த விளக்கமும் அல்ல. எனவே, இந்த இறுதி முயற்சிக்கும், உங்களைத்தான் அனுப்புகிறேன். இதற்கு ஆப்பரேஷன் 'தாமரை' எனப் பெயர் கொடுப்போம். அதன் தலைவர் நீங்கள்தான். உடனே புறப்படுங்கள்! ஆல் த பெஸ்ட்!'' என்றவுடன் எழுந்த டேவிட், கலெக்டரை நோக்கி மற்றுமொரு சல்யூட் அடித்தார்.

''ஸார்! என் வழிமுறையை நான் மிக ரகசியமாக வைக்க விரும்புகிறேன். நான் விரும்பும் மூன்று இன்ஸ்பெக்டர்களை என்னுடன் அழைத்துச் செல்ல உங்கள்

ஜெ. ஆல்பர்ட் இக்னேஷியஸ்

அனுமதி தேவை. என் ஆப்பரேஷன் முடிந்த மறுநாள், உங்களுக்கு விவரமான அறிக்கை அளிக்கிறேன். இக் கடத்தலை முறியடிக்க, நீங்கள் என் மேல் வைத்துள்ள நம்பிக்கைக்கு நன்றி...'' என்று கூறி வெளியே வந்தார் டேவிட்.

விரைந்து வெளியேறிய அவசரத்தில் வெளியே நின்றிருந்த கலெக்டர் பி. ஏ. பரஞ்சோதி மேல் மோதிக் கொண்டார். ''அடடா! ஐ' ஆம் சாரி! என்ன சார், உங்கள் ஆரப்பாளையம் வீட்டில் போன மாசம் கிரகப்பிரவேசமாமே! என்னிடம் சொல்லவேயில்லையே!'' அன்போடு கடிந்து கொண்ட டேவிட்டைச் சற்றுச் சங்கடத்துடன் பார்த்த பி.ஏ.வை ''ஓ.கே! ஓ.கே! ஒரு பேச்சுக்குத்தான் கேட்டேன்! வரேன்,'' என்று புறப்பட்டார்.

ஜூலை 5ஆம் நாள் இரவு பத்து மணியிருக்கும். கொடை ரோட்டுக்கும் சின்னாளப்பட்டிக்கும் இடைப்பட்ட மெட்டூர் ரயில்வே கிராஸிங்கில், திடீரென டேவிட்டின் ஜீப் நின்றது. வெளியே குதித்த இன்ஸ்பெக்டர்கள் நாராயணன், சீனு, முஸ்தபா ஆகிய மூவரும் டேவிட்டின் நம்பிக்கைக்கு உகந்தவர்கள். மூவரும் 'கிடு கிடு'வெனச் செயல்பட்டனர். அரை மணி நேரத்தில் சாலையின் குறுக்கே, ஒரு செக்போஸ்ட் அமைக்கப்பட்டது. இதைக் கவனித்துக் கொண்டிருந்த போதுதான், காலையில் கண்ட காட்சி நினைவுக்கு வந்தது. தான் ரகசியமாக எடுத்து வைத்திருந்த ஃபைலில் அந் நபரைப் பற்றிய முழுக் குறிப்புகளையும் தன் மனக் கண்ணில் கொண்டு வந்தார். ராமேசுவரத்தில் தான் கடத்தலைக் கண்டுபிடிக்க ரெடியாக வைத்திருந்த படகில், சீனியை அள்ளிப் போட்டுச் செயலிழக்கச் செய்ததும், ஆனால் பல மேலிடத்துச் சிபாரிசுகளினால் அகப்படாமல் விடுதலை ஆனதும், இன்று அவர் வகிக்கும் உயர் பதவியும், வீடியோவைப் போல் அவர் மனத்தில் ஓடியது.

''சார், ரெடி! நமது ஆப்பரேஷன் 'தாமரை'யை ஆரம்பிக்கலாம்.'' அனைவரும் தங்கள் கடிகாரத்தின் நேரத்தைச் சீர் செய்து கொண்டனர்.

டேவிட் ஆப்பரேஷன் 'தாமரை'யை விளக்கினார். ''ஜென்டில்மென், நான், நாராயணன், சீனு ஆகிய மூவரும் மப்டியில் சாதாரண விற்பனை வரி செக்போஸ்ட் கிளார்க்குகளைப் போல, இங்கு அமர்ந்திருக்கிறோம். முஸ்தபா கொடை ரோடு அருகே நமது சிப்பாய்களுடன் (கஸ்டம்ஸ் அலுவலகத்தின் கடைநிலை ஊழியர்கள்) நிற்கிறீர்கள். சீனுவும், நாராயணனும் வருகின்ற வாகனங்களை எல்லாம், சாதாரண விசாரணை செய்து விட்டு, ஒன்றன் பின் ஒன்றாக அனுப்புவார்கள். தங்கம் உடலில் அல்லது வாகனத்தில் எங்கு மறைக்கப்பட்டிருந்தாலும், அதை எதிரொலிக்கும் சக்தி வாய்ந்த கோல்டு டிடெக்டர் நம் அனைவரின் சட்டைப் பையிலும் உள்ளது. சந்தேகத்துக்குரிய எந்த வாகனத்தையும் நாம் உடனடியாக இங்கு பிடிக்கப் போவது இல்லை. விற்பனை வரி அதிகாரியைப் போல் வண்டியில் என்ன இருக்கிறது என்று பார்த்து விட்டு, எந்தவிதச் சந்தேகமும் ஏற்படாமல் அனுப்பிக் கொண்டிருப்போம். நமது இலக்கு நம்மை நெருங்கி வந்ததும், அதையும் வழக்கம் போல ரொட்டீன் விசாரணை செய்து விட்டு அனுப்பி விடுகிறோம். இலக்கு நம்மை அடைந்ததும் ரேடியோ செய்தியை சீனு முஸ்தபாவுக்குத் தெரிவிப்பார். இலக்கு நம்மைக் கடந்ததும் நாம் அனைவரும் அவர்கள் அறியாமல் பின்னே செல்கிறோம். சரியாகக் கொடை ரோடு ரயில் நிலையத்தை நமது இலக்கு அடைந்ததும், அங்கு சுமார் நூறு ஸ்குவாடு சிப்பாய்களுடன், துப்பாக்கி சகிதம் நிற்கும் முஸ்தபாவுடன் சேர்ந்து, அந்த இலக்கை மடக்குகிறோம். இதுதான் நமது ஆப்பரேஷன் தாமரையின் செயல்முறை. இறைவன் நமது முயற்சியை வெற்றியாக்கட்டும்'' என்ற டேவிட் 'சிலுவை' வரைந்து கொண்டதும் மூவரும் தங்கள் குறித்த இடத்தில் நின்று கொண்டனர்.

சுமார் மூன்று மணி நேரம் லாரிகள், கார்கள், ஜீப்புகள், மோட்டார்கள் அவர்களைக் கடந்து கொண்டிருந்தன. வண்டிகளை நிறுத்தி அவர்களிடம் சாதாரணமான விசாரணைகளைச் சீனுவும், நாராயணனும் மேற்கொண்டனர்.

லெவல் கிராஸிங்கைத் தாண்டி சில வினோதமான வீடுகள் காணப்பட்டன. குடிசைக்கும் ஓட்டு வீட்டுக்கும் இடைப்பட்ட அவ் வீடுகளில் 'பளிச்' 'பளிச்' என்று மின் விளக்குகள் எரியத் தொடங்கின. கொடை ரோடு தாண்டி, ஊர் எல்லையில் உள்ள டூரிங் டாக்கீஸில் படம் முடிந்து, பெண்கள் கூட்டம் மெதுவாகக் கரைந்து



வந்தது. மிகவும் மட்டகரமான நைலக்ஸ் சேலை அணிந்து கொண்டு, தலை நிறையக் கனகாம்பரத்தை வைத்துக் கொண்டு, அந்த வீட்டில் நுழைந்த இரண்டு பெண்களைக் கண்டு இலேசாகத் திடுக்கிட்டார் டேவிட். அப் பெண்களை அவர் அறிவார். ஒருத்தி அம்மணி. மற்றவள் அவள் தங்கை. போலீஸின் துணை கொண்டு, இவர்களை எத்தனை முறை கைது செய்து பெண்கள் விடுதிக்கு அனுப்பினாலும், மீண்டும் தங்கள் சுய தொழிலுக்குத் திரும்பி விடும் சமுதாயக் கிருமிகள். சீனுவை அழைக்க வாயெடுத்தார் டேவிட்.

திடீரென சற்றுத் தொலைவில் ஒரு லாரி வேகமாக வந்து தானே ஓர் ஓரமாக நின்றது. வண்டியில் ஓர் உருவம் அமர்ந்திருக்க, மற்ற இருவரும் ஒரே நேரத்தில் கீழே இறங்கினர். தலையில் முண்டாக கட்டிய ஒருவன், கைலியை மடித்துக் கட்டிக் கொண்டு நேரே அம்மணியின் குடிசையை நோக்கி நடந்தான். காக்கி உடை அணிந்த மற்றவன் வண்டியின் டிரைவர் சீட் பக்கமாக இறங்கி, ஒரு பெரிய மரத்தின் பின் மறைந்தான். அம்மணியின் வீட்டை நெருங்கிய அம் மனிதனை லாரி வெளிச்சத்தில் தெளிவாகப் பார்த்த டேவிட்டுக்கு மனத்திலே ஒரு மின்னல் — மூளை நரம்பிலே ஒரு பிளாஷ்பேக் — இம் மனிதனை





''லேசா... வயத்தை... வலிக்குட்டு... இருக்கு, டாக்டர்...!''

''எப்படி 'வலிச்சாலும்'... ஒரே 'ஃபீஸ்' தான்...! கவலைப்படாதீங்க...!''

— அப்துல்

எங்கோ பார்த்திருக்கேன். எங்கே? எங்கே?' உடன் செயல்பட்டார் டேவிட். 'நாராயணன்! அந்த லாரியில் அமர்ந்திருக்கும் ஆளிடம் வண்டி எங்கே போகிறது?' என்று விசாரியுங்கள். நானும் வருகிறேன்."

மெதுவாக மரத்தின் பின்னிருந்து தன்னை ஆசுவாசப்படுத்திக் கொண்டு வந்த டிரைவரை அணுகினார் டேவிட். ''வண்டி எங்கே போகுது அண்ணாச்சி? எங்க லாரி தூரத்திலே பிரேக் டவுன் ஆகிக் கிடக்குது. ஒரு லிப்ட் கிடைக்குங்களா?'' — டேவிட்டின் குரல் இனிமையைக் கண்டு, அவன் சிறிதும் சந்தேகிக்கவில்லை. ''வண்டி மதுரைக்குள்ள போகாதுங்களே, பைபாஸ் வழியே திருவனந்தபுரம் போகுது. ஏற்கெனவே நாங்க லேட். நீங்க வேற வண்டி பாருங்க...'' என்று லாரியில் ஏறினான். டேவிட் அருகில் வந்த நாராயணன், ''சார் வண்டியை செக்போஸ்டில் சீனுவை நிறுத்தச் சொல்லவா?'' என்ற போது, மெதுவாக டேவிட் வாயில் கை வைத்துச் சமிக்ஞை செய்தார். வண்டியை மெதுவாகச் சுற்றி வந்தார். முன் சக்கரங்களைத் தாண்டி நான்கு அடி வைத்த டேவிட்டின் பாக்கெட்டிலிருந்து மிக மெதுவாக ''பீப் பீப்'' ஒலி கேட்டது.

தங்கம் இருக்குமிடத்தை ஐந்து அடி தூரத்தில் நெருங்கினாலே பெரிதாக அலறும் தன் டிடெக்டர், மெதுவாக ஒலி எழுப்பக் காரணம் புரியாமல் நின்றார். டிரைவர், கிளீனர் இருவரும் அறியாத வண்ணம் லாரியில் ஏறினார். வண்டியினுள் சுமார் நூறு அஸ்பெஸ்டாஸ் தகடுகள், ஐந்நூறு ரோஜாச் செடிகள், இவை மட்டுமே. வண்டிக்குள் டிடெக்டர் அமைதியாக இருந்தது. எந்த சிக்னல் ஒலியும் இல்லை. குழப்பத்தோடு அவர் வண்டியிலிருந்து கீழே இறங்கவும், முண்டாக ஆசாமி அம்மணி வீட்டிலிருந்து வெளிப்பட்டான். அவன் வந்து ஏறிக் கொண்டதும் லாரி உடனே புறப்பட்டது.

ரயில்வே கிராஸிங் செக்போஸ்ட்டை நெருங்கியதும் நின்றது. அதை நோக்கி வேகமாக நடந்து வந்த டேவிட், லாரியை உரசி வேகமாகச் செக்போஸ்ட் அருகில் வந்தார். டேவிட்டின் பாக்கெட்டில் மீண்டும் மென்மையான ''பீப்பீப்'' சப்தம். முண்டாக ஆசாமி சீனுவிடம், ''விற்பனை வரி அயிட்டம் ஏதும் இல்லீங்க, கொஞ்சம் அஸ்பெஸ்டாஸ் தகடுதான் இருக்குங்க... வேணுமின்னா வண்டியில் ஏறிப் பார்த்துக்கங்க,'' என்று சத்தமாகச் சொல்லிக் கொண்டிருந்தான். டேவிட்டின் கை ஜாடையைக் கண்ட சீனு, ''சரி சரி வண்டி போகலாம்,'' என செக்போஸ்டை உயர்த்த, வண்டி மெதுவாக நகரத் தொடங்கியது. அந்த லாரி பத்தடி தாண்டியதும் அசுர வேகத்தில் ஜீப்பில் ஏறினார் டேவிட். ''டி.எம்.டி. 308 லாரி. இலக்கு எட்டியது. நோயாளி கையில் ஆபத்தான மருந்து. நிறுத்தி உடனே வைத்தியம் செய்யவும்,'' என்று சங்கேதக் குறியில் முஸ்தபாவுக்கு ரேடியோ செய்தி அனுப்பிக் கொண்டே, மற்ற அனைவரையும் ஏற்றிக் கொண்டு படுவேகமாக ஜீப்பை செலுத்தினார்.

**கொ**டை ரோட்டை நெருங்கியதும், அந்த லாரியைச் சூழ்ந்து கொண்டு முஸ்தபாவும் அனைத்து ஸ்குவாடு சிப்பாய்களும் நிற்பதையும் வண்டியிலிருந்த முண்டாகக்காரனுடன் காரசாரமாக விவாதிப்பதையும் கண்டார் டேவிட்.

''என்ன காசிமாயன்! சௌக்கியமா? எப்போதிருந்து இந்த வேலை?'' என்ற இனிமையான குரலைக் கேட்டவுடன் ஷாக் அடித்தவனைப் போல, ஒரு நிமிடம் ஆடிப் போன அவன், மறு நிமிடம் சுதாரித்துக் கொண்டு, ''ஓ! டேவிட் சாரா! பாருங்க சார்! உங்க ஆளுங்க பண்ற கூத்தை! நம்ம கலெக்டர் ஐயா பி.ஏ. பரஞ்சோதி சாருக்கு ரோஜாச் செடியும் அவர் பண்ணை வீட்டுத் தொழுவத்துக்குத் தகடும் எடுத்துட்டுப் போறோம். நான் அவர் தம்பி காசிமாயன்னு தான் உங்களுக்குத் தெரியுமே சார்! நீங்களாவது இந்த ஆளுங்களுக்கு எடுத்துச் சொல்லுங்க!'' தான் காலையில் பார்த்த பரஞ்சோதியின் குடும்பப் போட்டோவில் பரஞ்சோதி அருகில் இருந்தவனும் ராமேசுவரத்தில் அவர் கூடவே திரியும் இந்தக் காசிமாயனைப் பார்த்தவுடன் டேவிட்டுக்கு தன் முன்னால் தோன்றிய சிக்கல்கள் அனைத்தும் விடுபடுவது போன்ற ஓர் உணர்வு.

''நாராயணன்! இவர் நம்ம கலெக்டர் பி.ஏ. சாரின் தம்பி! நம்ம ரூல்ஸ் பிரகாரம் செக்கிங்கை முஸ்தபா பார்க்கட்டும். நீங்க வண்டியை லேசா ஒரு பார்வை பார்த்து விட்டு சீக்கிரம் அனுப்புங்க. பரஞ்சோதி சார் கோவிச்சுக்கப் போறாரு,'' என்ற டேவிட்டின் சங்கேதத்தைப் பு ரி ந் து

கொண்ட நாராயணன், வண்டி முழுவதையும் சோதனையிட்டார். வெறும் அஸ்பெஸ்டாஸ் தகடுகளும், ரோஜாச் செடிகளையும் தவிர வேறு ஏதும் அங்கு இல்லை. டிடெக்டரும் எவ்விதச் சிக்னலும் தரவில்லை.

''உங்கள் ஆர்.சி. புத்தகத்தை மட்டும் கொடுங்கள், காசிமாயன்! அதன் நம்பரைக் குறித்து விட்டுத் தருகிறேன். உடனே நீங்கள் புறப்படலாம்,'' என்ற டேவிட்டிடம் ''இந்தாங்க சார் ஆர். சி. புத்தகம் மற்றும் டீசல் பில், சரக்கு இன்வாய்ஸ் பில் எல்லாத்தையும் நல்லாப் பார்த்துட்டே குடுங்க'' என்று வீரமாக நீட்டிய காசிமாயனிடமிருந்து அமைதியாகப் பெற்றுக் கொண்டார்.

ஆர். சி. புத்தகத்தைப் புரட்டினார். அந்த லாரி பெங்களூரில் ரிஜிஸ்தர் செய்யப்பட்டிருந்தது. டீசல் பில்களைப் பார்த்தார். பெங்களூர், ஹோசூர், சேலம், நாமக்கல், கரூர், திண்டுக்கல் இப்படி வரிசையாகப் போடப்பட்டுள்ள பில்களை எல்லாம் மடித்துக் காசிமாயனிடமே கொடுத்தார்.

''வெரி சாரி காசிமாயன்! நீங்க கிளம்புங்க! சிரமத்துக்கு மன்னிக்கணும். பரஞ்சோதி சார் எங்களை நிச்சயம் கோவிச்சுக்குவார் இல்லையா?''

''பின்னே என்ன சார்! நம்ம டிபார்ட்மெண்ட் ஆளுங்களுக்கே இவ்வளவு தொந்தரவா?'' என்று சலிப்புடன் வண்டி எடுக்க முயன்ற காசிமாயனை, ''ஒரு நிமிடம் காசிமாயன்'' என்ற டேவிட்டின் இரும்புக் கரம் தடுத்து நிறுத்தியது.

''என்ன காசிமாயன் பெங்களூரிலிருந்து வரிசையா எண்பது கிலோ மீட்டருக்கு ஒரு முறை டீசல் போட்டுக்கிட்டே வந்திருக்கீங்களே, டீசல் டாங்கில் என்னமும் கோளாறா? உங்கள் டபுள் டீசல் டாங்கிலே சுமார் 320 லிட்டர் டீசல் போடலாமே! இது என்ன கோளாறுன்னு இங்கே உள்ளவங்ககிட்டே கொஞ்சம் சொல்றீங்களா?'' என்ற டேவிட்டின் விஷமப் புன்னகையைக் கண்டவுடன் காசிமாயனின் கை இடுப்பருகில் சென்றது.

''பளக்'' என்ற சத்தத்துடன் கடுமையாக இறங்கிய டேவிட்டின் இரும்புக் கரம் காசிமாயனின் முகத்தைப் பதம் பார்க்க, தடுமாறி விழுந்த காசிமாயனை, முஸ்தபா உடும்புப்பிடியாகப் பிடித்துக் கொள்ள, நாராயணன் காசிமாயனின் இடுப்பிலிருந்த ரிவால்வரை உருவி எடுக்க, ஒரு நிமிட நேர உச்சக் கட்டப் போராட்டம் ஒரு நொடியில் அடங்கியது.

அடுத்த அரை மணி நேரத்தில் அனைவரும் வைத்த கண் வாங்காமல் பார்க்க, ஸ்குவாடு சிப்பாய்கள் லாரியின் டீசல் டாங்கைப் பிரித்து எடுக்க உள்ளே அதன் முக்கால் பாகத்தை அடைத்துக் கொண்டிருந்த பெரிய பாக்கெட்டை உருவி எடுத்தார் டேவிட். பாக்கெட்டைப் பிரித்ததும் 'ஆ'வென அனைவரும் அலற, சுமார் ஒன்றரைக் கோடி மதிப்புள்ள தங்க பிஸ்கெட்டுகள் சுத்தமாக அடுக்கப்பட்டு, மெட்டல் டிடெக்டர் எதிரொலிக்க முடியாத ரசாயனப் பொருள் கலந்த பேப்பரின் இடையே கண் சிமிட்டிக் கொண்டிருந்தன.

''ஜீசஸ்!'' என்று வியந்த டேவிட், ''காசிமாயன், உன்னை இந்தத் தங்கக் கடத்தலுக்காகக் கைது செய்கிறேன். எக்ஸைஸ் துறையின் நடவடிக்கைகள் எல்லாம் தகர்த் தெறியும்படி, கடத்தல்காரர்களுக்கு உதவி செய்த உளவாளி பரஞ்சோதி என்பது தெளிவாகத் தெரிகிறது! அரசாங்கம் பரஞ்சோதிக்குக் கொடுத்த ரிவால்வார் உன்னிடம் இருப்பதே இதற்கு முதல் சாட்சி! விசாரிக்கிற முறையில் விசாரித்தால், மற்ற எல்லா விவரங்களும் தானே விளங்கி விடும். நாராயணன்! நாம் அனைவரும் புறப்படலாம்'' என்றார். அவர் ஜீப் அனைவரையும் சுமந்து கொண்டு 'விர்' எனப் புறப்பட்டது.

சரியாக அதே நேரம் டெல்லித் தலைமைச் செயலகத்தில் இரவோடு இரவாக, டேவிட்டின் பேரில் கடமை தவறல், கடத்தல் கேஸில் தீவிரம் காட்டாமை, இன்ன பிற காரணங்களுக்காக ஒரு சஸ்பென்ஸன் ஆர்டர் தயாராகிக் கொண்டிருந்தது. அங்குள்ள தலைமைக் கடத்தல் மன்னனின் கைங்கரியத்தால் —

அதைச் சற்றும் அறியாத நம் கடமை வீரர் டேவிட் தன் ஜீப்பை வேகமாகச் செலுத்திக் கொண்டிருந்தார்.

அவன் : இந்த ஹோட்டல் முதலாளி முன்பு பத்திரிகை ஆசிரியரா இருக்கணும்னு எப்படிச் சொல்றே?

இவன் : பேப்பர் ரோஸ்ட் ஓரத்துல 'அனைவைச் சுருக்கவும்; விலையைத் திருத்தவும் முதலாளிக்கு உரிமை உண்டு'ன்னு போட்டிருக்கிறாரே!

— புனிதவல்லி இளங்கோ.



அடுத்த நூற்றாண்டு...

# 'ஸிடி ராம்' என்கிற விந்தை!

16

சென்ற அத்தியாயத்தில், இறுதியில் கொஞ்சம் புரிவது கஷ்டமாக இருந்ததாகச் சிலர் அபிப்பிராயப்பட்டார்கள். ஓர் எல்லைக்கு மேல், இந்த அறிவியலை எளிமைப் படுத்துவது இயலாத காரியம். அப்படி எளிமைப்படுத்தினால், உண்மை மழுப்பப்பட்டு விடும். அதற்கு எனக்கு உடன்பாடு இல்லை. இதைப் படிப்பவர்களுக்கு, ஒரு வேண்டுகோள். அத்தனையும் புரிய வேண்டும் என்கிற கட்டாயமில்லை. பொதுவாக, சற்றுக் குறைபடப் புரிந்தாலும் சரி; அடுத்த நூற்றாண்டை நோக்கி நாம் எவ்வாறான பாதையில் போய்க் கொண்டிருக்கிறோம் என்று தெரிந்தால் சரி.

அறிவுபூர்வமான கம்ப்யூட்டர்களைக் கொண்டு வர ஜப்பானியர்கள் முயற்சி செய்து கொண்டிருக்கிறார்கள். ஞாபக அடுக்குகளில் செய்திகளை, அதன் அர்த்தங்களுக்கு ஏற்றவாறு சேர்த்து வைக்கிறார்கள். எல்லாவற்றிலும் பொதுவாகக் கம்ப்யூட்டர் ஞாபகங்கள் இருப்பதை, நீங்கள் கவனித்திருக்கலாம்.

கம்ப்யூட்டர் ஞாபகங்கள் என்பது என்ன? ராம், ரேம், ஃப்ளாப்பி டிஸ்க், ஹார்ட் டிஸ்க் என்று, பல பெயர்களை நீங்கள் கேள்விப்பட்டிருக்கலாம். கம்ப்யூட்டர் ஞாபகங்களுக்கும் நம் ஞாபகங்களுக்கும் உள்ள வேறுபாடுகள், ஒற்றுமைகள் என்ன?

மூளை ஒரு விஷயத்தை எவ்வாறு நினைவு வைத்துக் கொள்கிறது என்பதை, நாம் இன்னமும் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. 'நியூரான்' என்கிற ஓர் இணைப்புப் புள்ளியில், ரசாயன மின்னோட்டங்களாக, நம் மூளைச் செய்திகள் பதிவாகி இருப்பதையும், ஒரு நியூரானிலிருந்து, கோடிக்கணக்கான இணைப்புக்கள் மற்ற நியூரான்களுக்கு இருப்பதையும், அவை அனைத்திலும் ஒரே சமயத்தில் செய்திப் பரிமாற்றம் நிகழ்வதையும் சொல்கிறார்கள்.

சுஜாதா

ஒரு கம்ப்யூட்டரின் மெமரி பகுதியில், ஒரு செய்தி எங்கே பதிவாகியிருக்கிறது என்று சரியாகச் சொல்ல முடியும். 'இத்தனாவது ட்ராக்கில் இத்தனாவது பைட்டாக இருக்கிறது,' என்று அச்சடித்தாற் போல் சொல்ல முடியும். மூளையில் அப்படி இல்லை. ஓர் ஆளைப் பற்றிய அல்லது ஒரு பொருளைப் பற்றிய ஞாபகம், வகை வகையாகப் பதிவாகிறது. ஸ்ரீதேவி என்றால் ஸ்ரீதேவியின் குரலை உங்களால் அடையாளம் கண்டுபிடிக்க முடிகிறது. அது ஓர் ஆடியோ வடிவம். பத்திரிகையில் அவர் மூக்கை — கண்ணைக் காட்டினால் போதும், ஸ்ரீதேவி என்று சொல்லிவிடுகிறீர்கள். காட்சியாக, குரலாக, நடையாக, பாவனையாக உங்கள் மனத்தின் பல்வேறு இடங்களில் ஸ்ரீதேவி பதிவாகியிருக்கிறார். கம்ப்யூட்டரில் 'டேட்டா' என்பதைப் பல்வேறு 'அட்ரிப்யூட்ஸ்' என்று பதிவு செய்கிறார்கள். அனைத்துமே பைனரி எண்களாக, சங்கேதங்களாகத்தான் இருக்கும். கம்ப்யூட்டரின் ஞாபகம் ஒன்றன் பின் ஒன்றாக, வேறு வேறு இடங்களில் பைனரி வடிவங்களில் பதிவாகி இருக்கும். அதன் விவரங்கள் நமக்கு அத்துபடி. மூளை எப்படி அதைச் செய்கிறது என்பதை, இந்த நூற்றாண்டின் இறுதிக்குள் கண்டுபிடிக்க சான்ஸ் இல்லை. கம்ப்யூட்டர் 'ப்ரூட் ஃபோர்ஸ்' என்று சொல்வார்களே, அந்த முறையில்தான் நினைவறைகளை நிரப்புகிறது. அதனால் கம்ப்யூட்டர்களுக்கு ஞாபகத் தேவை அதிகரித்துக் கொண்டே வந்திருக்கிறது.

ஒரு பைனரி துணுக்கை பிட் என்பார்கள். எட்டு பிட்டை, பைட் என்பார்கள். ஆயிரம் பைட்டை கிலோபைட். ஆயிரம் கிலோ பைட், மெகா பைட். இப்படிக் கணக்கு வைத்துக் கொள்கிறார்கள். கம்ப்யூட்டர் ஞாபகத் தேவை, இப்போது ஆயிரக்கணக்கான மெகா பைட்டுக்குப் போய்விட்டது. 'டெராபைட்' என்கிற புதுப் பிரயோகங்கள் வந்துவிட்டன.

மூளையின் ஆதாரமான செல் நியூரான் என்றோம். கம்ப்யூட்டரின் ஆதாரமான செல் 'ஃப்ளிப் ஃப்ளாப்' என்பார்கள். ஐஸி என்னும் சில்லில் லட்சக்கணக்கான ஸ்விட்ச் போன்ற அமைப்புக்களில் அடர்ந்த ட்ரான்ஸிஸ்டர்களில் ஒரு ஜோடி ட்ரான்ஸிஸ்டரை ஃப்ளிப் ஃப்ளாப் என்பார்கள். அதில் ஒரு பிட், ஒரு பைனரி எண்ணிக்கையை 1 அல்லது 0 இதைக் குறித்துக் கொள்ள முடியும். ஆதாரமாக அத்தனை செய்திகளும் கம்ப்யூட்டரில் இந்த வடிவத்தில்தான் பதிவாகிறது.

பைட், கிலோபைட், மெகாபைட்... ஒரு ஃப்ளாப்பி தகட்டில் சுமார் அறுநூறு கிலோ பைட்டுகள் குறித்துக் கொள்ள முடியும். உங்கள் டெலிவிஷன் பெட்டியில் ஒரு செகண்டுக்கு 25 ஃப்ரேம்களில் ஒரு ஃப்ரேமில் தோன்றுவதை அப்படியே பைனரி வடிவத்தில் மாற்றி எழுதிக் கொள்ள 750 கிலோ



* கம்ப்யூட்டர் மூலம் சிருஷ்டித்த படம்...

பைட் வேண்டும். அதனால் ஃப்ளாப்பி தகடு பிம்பங்களைச் சேர்த்து வைத்துக் கொள்ள அதிகம் பயன்படாது என்பது புலனாகிறது. ஒரு செகண்டுக்கே 18.75 மெகாபைட்டுகள் வேண்டும். வின்செஸ்டர் போன்ற டிஸ்க்குகளின் தகுதி அளவு அறுபது மெகாபைட். மிஞ்சிப் போனால் நூற்றிருபது என்று கிடைக்கிறது. இதனால் ஒரு வின்செஸ்டரில் 7 செகண்டுக்கு உண்டான படங்களை மட்டும் சேர்த்து வைத்துக் கொள்ள முடியும்.

ஆனால் வின்செஸ்டர் ஃப்ளாப்பி போன்ற சாதனங்களில் தகவல்களை எழுத்து ரூபத்தில் சேர்த்து வைப்பதானால் ஒரு லைப்ரரியையே சேர்த்து வைக்க முடியும். ஒரு பட ரூபத்தை, அதன் வெளிச்ச வித்தியாசங்களை, டிஜிட்டல் வடிவத்தில் சேர்த்து வைப்பதனால்தான் மிகவும் விரயமாகிறது. இதனால் வீடியோ போன்ற விஷயங்களை, அவர்கள் அனலாக் வடிவத்தில் சேர்த்து வைத்துக் கொண்டார்கள். உங்கள் வீட்டு வி ஸி ஆர்., வி ஸி பி போன்றவைகளில் டேப்பில் வடிவங்கள் பதிவாகியிருப்பது அனலாக். டிஜிட்டலாக மாற்றினால் ஒரு சௌகரியம் உண்டு. அதைப் பலவிதங்களால் கம்ப்யூட்டர் மூலம் மாற்றலாம், குறுக்கலாம், பெருக்கலாம், ஃப்ரீஸ்செய்யலாம்.சிலடெலிவிஷன்பெட்டிகளில் இந்த வசதி கொண்டு வந்திருப்பதை விளம்பரங்களில் பார்த்திருக்கலாம். தாற்காலிகமாக ஒரே ஒரு ஃப்ரேமைச் சேர்த்து வைத்து, அதை டிஜிட்டலாக்கிச் சித்திரவதைகள் எல்லாம் பண்ணியபின், மீண்டும் அனலாக் வடிவத்தில் மாற்றி டீ. விக்கு அனுப்புகிறார்கள். முழுவதும் டிஜிடல் வடிவத்தில் செய்ய, அதிகப்படியாக மெமரி தேவைப்பட்டதால், ஒரு கட்டத்தில் நின்று போயிருந்தது இந்த இயல்.

ஆடியோ பாட்டு, குரல் இவைகளுக்கென்று ஸிடி ப்ளேயர் (CD Player) என்று ஒன்று வந்தது. நீங்கள் கேள்விப்பட்டிருக்கலாம். ஒரு சிறிய தகட்டில் பாட்டின் அலை வடிவத்தை, டிஜிட்டலாக்கி லேஸர் ஒளி மூலம் அதைப் பதிவு செய்து, திரும்பப் பாடும்போது, மீண்டும் அதை அனலாக் வடிவாக்கி இசைக்கிறார்கள். இதில் அபூர்வமாக, துல்லியமாக, மிகமிகத் தெளிவாக இசைக்க முடிந்தது. காரணம் டிஜிட்டலாக அந்த அலை வடிவத்தை மாற்றும் போது, அதில், உள்ள கொர கொர சப்தங்களையெல்லாம் சுத்தம் பண்ணி விடலாம்.

ஸிடி ப்ளேயரை உங்கள் ஊரில் யாராவது சினிமாக்காரர்கள் அல்லது எம்.எல்.ஏக்கள் வைத்திருப்பார்கள். ஒரு முறை கேட்டுப் பாருங்கள். வெள்ளியை வார்த்து ஊற்றுவது போல் அத்தனை சுத்தமாக, பின்னணியில் சப்தமின்றி, தெளிந்த நீரோடை எல்லாம் ஞாபகம் வரும்!

இந்த ஸிடி முறையை ஆடியோ டேப்பில் கொண்டு வந்தால் என்ன என்று யோசித்து, அதற்கு இப்போதுதான் அனுமதி கிடைத்திருக்கிறது. இதை டிஜிட்டல் ஆடியோ டேப் என்கிறார்கள்.

கம்ப்யூட்டர்காரர்கள் இந்த ஸிடியை நன்கு உற்றுப் பார்த்துக் கம்ப்யூட்டர் செய்திக்கு அதை உபயோகப்படுத்த யோசித்தார்கள். பிறந்தது ஸிடி ராம் (CD ROM) என்கிற வித்தை. ஒரு தகட்டில் லேசர் ஒளி மூலம் செய்தியைப் பைனரி துணுக்குகளை அடர்த்தியாக எழுதிக் கொண்டு, மறுபடி அனலாக் வடிவத்தில் மாற்றிக் கொடுப்பதை, பிஸி போன்ற கம்ப்யூட்டர்களில் செய்து பார்க்கக் கூடிய சில்லுகளைத் தயாரிக்கத் துவங்கினார்கள். அதை டி வி ஐ என்கிறார்கள். டிஜிட்டல் வீடியோ இண்டர்ஃபேஸ். அதுதான் இப்போது லேட்டஸ்ட். அடுத்த நூற்றாண்டுக்குள் ஸிடி ராம்கள் வந்து, ஒரு புதிய இயலைத் துவக்கப் போகின்றன. பயிற்சி, விளம்பரம் இவையனைத்திலும் ஒரு புரட்சி நிகழ இருக்கிறது.

அதை விளக்கமாக அடுத்த வாரம் சொல்வதற்குள், இந்த வார 'பைட்' கணக்குகளில் தெரிந்தே ஒரு தப்புச் செய்திருக்கிறேன். அதை முதலில் கண்டுபிடித்துச் சொல்பவருக்குப் பரிசு!

(தொடரும்)

# சுகமான வலிகள்

அவன் அவசரமாக ஆபிசுக்குக் கிளம்பிக் கொண்டிருந்த போதுதான் வாசலில் குரல் கேட்டது.

''சார், தபால்...''

பரபரப்போடு ஓடிப் போய் வாங்கியவனுக்கு, முகவரியின் கையெழுத்தைப் பார்த்ததுமே, அது மனைவியிடமிருந்துதான் என்பது தெரிந்து விட்டது. மடித்து, சட்டைப் பையில் செருகிக் கொண்டு, கதவை அவசரமாகப் பூட்டினான். பஸ்ஸுக்கு நேரமாகி விட்டது. நடையை எட்டிப் போட்டான். கடிதத்தை உடனே படிக்க வேண்டுமென்ற ஆவல் அவனை வதைத்தது. பஸ்ஸில் ஏறி உட்கார்ந்ததும் படிக்க வேண்டுமென்று நினைத்துக் கொண்டான்.

தலைப் பிரசவத்திற்காகத் தாய் வீடு போயிருக்கும் வாணியிடமிருந்துதான் அந்தக் கடிதம் வந்திருந்தது.

பஸ் ஸ்டாப்பிற்கு எதிர் ஹோட்டலில் அவசரமாக இட்லிகளைப் பிட்டு விழுங்கிய போது, வீட்டுச் சாப்பாட்டு ஏக்கம் அவனைத் தாக்கியது.

இயந்திரத்தனமாக பில் பணத்தைக் கொடுத்து விட்டு, பஸ் ஸ்டாப்பில் வந்து நின்றான். அடுத்த நிமிடத்துக்குள்ளேயே பஸ் வந்து விட்டது.

ஏறி உட்கார்ந்து, இடம் பிடித்த உடனேயே கடிதத்தை வெளியே எடுத்தான். ஆட்காட்டி விரலைச் செருகிக் கிழித்தான். பார்வையை ஓட விட்டான்.

அவனை நலம் விசாரித்துத் துவங்கியிருந்தாள். நிறையப் புத்திமதி கூறியிருந்தாள். நல்ல ஹோட்டலில் சாப்பிடச் சொல்லி, இரவில் தவறாமல் பால் குடிக்கச் சொல்லி, தன்னைப் பற்றிக் கவலைப்பட வேண்டாமென்று சொல்லி, வீட்டைச் சுத்தமாக வைத்துக் கொள்ளச் சொல்லி, கரண்ட் பில்லை மறக்காமல் கட்டச் சொல்லி... குழந்தை பிறக்கப் பத்து நாட்களுக்கு மேலாகும் என்று டாக்டர் கூறுவதாகவும், அவன் அடுத்த வாரத்திற்குப் பிறகு லீவு எடுத்துக் கொண்டு மன்னார்குடி வந்தால் போதுமென்றும் எழுதி முடித்திருந்தாள்.

அலுவலகத்தில் அவனுக்கு வேலை ஓடவில்லை. மனம் மன்னார்குடியை நோக்கிக் கட்டறுந்து ஓடிக் கொண்டிருந்தது.

“ராஜ்கோகுல்”

இந் நேரம் என்ன செய்து கொண்டிருப்பாள்? குனிஞ்சு, நிமிர்ந்து வேலை செய்திட்டிருந்தாத்தான் பிரசவம் சுலபமா அமையும்னு டாக்டர் சொன்னாரே...? செய்கிறாளோ, இல்லையோ தெரியலையே...

''என்ன சார் கனவு காண்றீங்களா? வொய்ஃப் நினைப்பு வந்துடுச்சா?'' என்ற டைப்பிஸ்ட் கமலாவின் கேலியால் நிகழ்காலத்திற்கு வந்த பாஸ்கர், பதில் சொல்லாமல் சிரித்து மழுப்பினான்.

''இதுதானே சார் மாசம்...?''

''ஆமாங்க... இன்னும் பத்து நாளுக்கு மேலாகுமாம். லெட்டர் வந்திருக்கு...

''ஒண்ணும் கவலைப்படாதீங்க.. எல்லாம் நல்லபடியா நடக்கும்...'' — கமலா சொன்னாள் — மகளை அழைத்துக் கொண்டு ஊருக்குக் கிளம்பும் போது பார்வதியம்மாள் — மாமியார் சொன்ன அதே வார்த்தைகள்!

'உங்களுக்கு ஹோட்டல் சாப்பாடு ஒத்துக்குமாங்க...?' கேட்கும்போதே வாணியின் கண்கள் கலங்கின.

'ஏய்...! என்ன இது கண்ணுல தண்ணி'...? எனக்கு ஒரு குழந்தையைத் தர்றதுக்காக நீ இவ்வளவு கஷ்டப்படும் போது, நான் கொஞ்ச நாள் ஹோட்டல் சாப்பாட்டு அவதியை அனுபவிக்கக் கூடாதா என்ன...?' அவன் சிரிக்க வைக்க முயற்சி பண்ணினான். முடியவில்லை.

கட்டுப்படுத்த முடியாமல் அவள் விசும்பினாள்.

'பிரசவ நேரத்திலே நீங்க என் பக்கத்திலேயே இருக்கணும்...'

'நிச்சயமா இருப்பேன்... அந்தச் சமயத்திலே உன்னைப் பிரிஞ்சு என்னாலே இருக்க முடியுமா என்ன...? பிரசவத் தேதிக்கு ஒரு வாரம் முன்னாடியே லீவு போட்டுட்டு ஓடி வந்துடுவேன்...'

வாணி அம்மா, அப்பாவுடன் கிளம்பினாள். விடைபெறும் போது அவளது அம்மா சொன்னாள். 'நீங்க ஒண்ணும் கவலைப்படாதீங்க தம்பி! எல்லாம் நல்லபடியா நடக்கும்...'

அடுத்த நாள் பிற்பகலில் அந்தத் தந்தி வந்தது. பாஸ்கர் பதற்றத்தோடு படித்தான்.

நல்ல செய்திதான் — வாணிக்கு ஆண் குழந்தை பிறந்து, இருவரும் நலமாக இருக்கிறார்களாம்.

அவனுக்கு ஆச்சரிய அதிர்ச்சி!

நேற்றுத்தானே எழுதியிருந்தாள் — பத்து நாட்களுக்கு மேல் ஆகும் என்று? அதற்குள் எப்படி...?

ஒரு வாரம் லீவு வாங்கிக் கொண்டு உடனே புறப்பட்டான்.

''எதிர்பாராம முன்னாடியே பிறந்துடுச்சா வாணி...?'' என்று கேட்ட பாஸ்கரின் முகத்தில் ஏமாற்றம் பரவிக் கிடந்தது.

''இல்லீங்க... நேத்திக்கு அல்லது இன்னைக்கு ஆயிடும்னுதான் டாக்டர் சொல்லி

யிருந்தாங்க...'' — பதில் சொன்ன வாணியின் முகத்தில் தாய்மையின் பூரிப்பு, குடியேறியிருந்தது.

''அப்புறம் ஏன் பத்து நாளுக்கு மேலாகும்னு லெட்டர்லே எழுதினே...?'' அவன் அதிர்ச்சி மேலிடக் கேட்டான்.

அவள் கனிவோடு அவனைப் பார்த்தாள். கொஞ்ச நேரம் பேசாமல் பார்த்துவிட்டுப் பிறகு பேசினாள்.

''நான் உங்களைச் சிரமப்படுத்த விரும்பலீங்க. உங்களுக்கு ஒரு இனிப்பான செய்தியைத் திடீர்னு தெரிவிச்சு, உங்களைத் திக்குமுக்காடச் செய்யணும்னு நினைச்சேங்க. டாக்டர் வேற ஆயுதக் கேஸாயிடுமோன்னு சந்தேகப்பட்டார். பிரசவச் சமயத்திலே நீங்க வந்திருந்தா, ரொம்பச் சஞ்சலப்பட்டிருப்பீங்க. உங்களுக்கு டென்ஷன் அதிகமாகும். ரொம்பக் கவலைப்பட்டிருப்பீங்க. அந்த வேதனையெல்லாம் உங்களுக்குக் கொடுக்க வேண்டாம்னு தோணிச்சுங்க. அம்மா கூட எழுதிடுன்னுதான் சொன்னாங்க. நான்தான் உண்மையைத் தெரியப்படுத்தாம, பத்து நாளுக்கு மேலாயிடும்னு எழுதினேன்...''

அவனது முகம் கருங்கிப் போனது. ஏமாற்றத்தால் தாக்குண்ட அவனது மனம் வெதும்பியது. மனைவியின் முகத்தைப் பார்க்காமல், ஜன்னல் வழியே வராந்தாவை வெறித்தான்.

''என்னங்க முகம் இப்படி ஆயிடுச்சு...? கோபமா...?'' அவள் பயத்தோடும் கவலையோடும் கேட்டாள்.

''என்னைப் பத்தி நல்லாத் தெரிஞ்சும் இப்படிப் பண்ணிட்டியே வாணி...?'' கோபமாகக் கேட்டான்.

''என்னங்க...?'' அவள் புரியாமல் தடுமாறினாள்.

''வெறும் சுகத்தையும், சந்தோஷத்தையும் மட்டும் அனுபவிக்கிறதுதான் வாழ்க்கைன்னு நினைக்கிறியா வாணி? உள்ளே நீ பிரசவ வேதனையாலே துடிக்கும்போது, வெளியே காத்துக் கிடப்பது எனக்கு இரண்டு மடங்கு வேதனைதான் — தவிப்புத்தான். ஆனா அது ஒரு வகையான சுகமான தவிப்பு — சுகமான வலி. அந்தத் தவிப்பின் முடிவிலே கிடைக்கப் போகும் சுகத்துக்காக, அதை அனுபவிக்கத்தான் வேணும். நான் நுழைய முடியாத அறைக்குள்ளே டாக்டர், நர்சுகள் மத்தியில் நீ கிடக்க, நான் ஒரு பரபரப்பான எதிர்பார்ப்போடு, கைகளைப் பிசைந்து கொண்டு வராந்தாவில் குறுக்கும் நெடுக்குமாக நடப்பதும், பெஞ்சில் உட்காருவதும், நர்ஸ் பின்னே ஓடி விவரம் கேட்பதும், மீண்டும் நடப்பதும் உட்காருவதும்... கடைசியில், உனக்குச் சுகப் பிரசவம் என்று கேள்விப்படுவதும்... அது எவ்வளவு பெரிய அனுபவம் தெரியுமா...?''

சொல்லிக் கொண்டே போன கணவனைப் பெருமையோடு பார்த்தாள் வாணி. ●



# இளைஞர்களின் பாபா



'இளைஞர்கள் பற்றிய பாபாவின் கருத்துக்கள்' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுத வேண்டும் என்று என் மனைவி திட்டமிட்டிருந்தாள். இது தொடர்பாக பாபாவைக் கேட்க நிறையக் கேள்விகள் தயாரித்து எழுதிக் கொண்டும் வந்திருந்தாள். ஸ்ரீ சத்ய சாயிபாபா நாற்காலியில் அமர்ந்திருந்தார். என் மனைவி, மூன்று மகன்கள், நான் எல்லோரும் அந்தச் சிறிய அறையில் தரையில் உட்கார்ந்திருந்தோம். பாபாவின் சமூகத்தில் எதையும் கேட்க என் மனைவிக்கு நா எழவேயில்லை!

அதிசயம் என்னவென்றால், பாபா தாமாகவே இளைஞர்களைப் பற்றிப் பேச ஆரம்பித்தார். அப்போது அன்பினால் அவர் கண்கள் பிரகாசித்தன.

"இளைஞர்களுக்குத்தான் நாம் முக்கியமாக வழிகாட்ட வேண்டும். மோசமான பெரியவர்களின் முன்னுதாரணத்தைப் பின்பற்றி அவர்கள் கெட்டுப் போய்விடாமல் காப்பாற்ற வேண்டும். சத்தியம், நேர்மை, கடின உழைப்பு இவற்றைப் பின்பற்றுமாறு இளைஞர்களை நாம் கேட்டுக் கொள்ள வேண்டும்" என்று தொடங்கி தொடர்ந்து பேசினார் பாபா: "நான் ஒழுக்கக் கட்டுப்பாடு விஷயத்தில் கடுமையானவன். என் மாணவர்கள் அதிகாலையில் எழுந்து குளித்துவிட்டுத் தியானத்தில் ஈடுபடவேண்டும். பிறகு படிக்க வேண்டும். படித்தபிறகு விளையாட்டு. அப்புறம்சிறிதளவேனும் சமூக சேவை. சீக்கிரம் படுத்துக் கொண்டுவிட வேண்டும். இங்குள்ள கல்லூரி ஹாஸ்டல் மாணவர்கள் முறை போட்டுக் கொண்டு காண்டீன் வேலைகளைக் கூடச் செய்வார்கள். சமையல் வேலை, பாத்திரங்களைச் சுத்தம் பண்ணுவது, கடை கண்ணிக்குப் போய்ச் சாமான்கள் வாங்க உதவுவது, மாடு கன்றுகளைப் பராமரிப்பது, ஏன் விவசாயம் கூடச் செய்வார்கள்.





மாணவர்களுக்கு நான் கூறுவது 'சீக்கிரமாகக் கிளம்பி, நிதானமாக வாகனத்தை ஓட்டி, பத்திரமாகப் போய்ச் சேருங்கள்' என்பதுதான். படிப்பும் இப்படியே. வருஷ ஆரம்பத்திலேயே நன்றாகப் படிக்கத் தொடங்கிவிட வேண்டும். நிதானமாகப் படித்துப் பத்திரமாகப் பரீட்சை எழுதலாம். கடைசி நிமிஷத்தில் அவசரம் அவசரமாக உருப் போடுவது, நேரமாகி விட்டது என்று வாகனத்தை வேகமாகச் செலுத்துவதற்கு ஒப்பானது! ஆபத்து அதிகம்.

"இன்றைய கல்வித் திட்டத்தின் நிலைமை என்ன? 35 சதம் பெற்றால் பாஸ்! பாக்கி 65 சதம் தெரிந்திருக்க அவசியம் இல்லை!



அரைகுறையாகப் படித்தால் இந்த 35 சதமும் சீக்கிரமே மறந்து விடுகிறது. இதன் விளைவு: மோசமான சாலைகள், தகர்ந்து விழும் பாலங்கள்! தேசம் எப்படி உருப் படும்? பழைய குருகுல முறையைக் கவனி யுங்கள்! சிஷ்யனுக்கு நூறு சதமும் தெரிந்தா லன்றி குரு அவனை வெளியே அனுப்ப மாட்டார்! அப்படிப்பட்ட நிலை மீண்டும் உருவாக நாம் முயற்சி எடுக்க வேண்டும்.

''இளைஞர்கள் சோம்பி இருக்கச் சிறிதும் அவகாசம் தரக் கூடாது. சோம்ப லின் விளைவுதான் அரட்டை அடிப்பது, குப்பை சினிமா பார்ப்பது, மோசமான புத்த கங்கள் படிப்பது, வேறு பல கெட்ட பழக்கங் களுக்கு அடிமைப்பட்டுப் போவது. சோம் பலிலிருந்து இளைஞர்கள் விடுபட்டால் தான் வாழ்க்கையின் உண்மையான மதிப்பு களை உணர்வார்கள்...''

இச்சமயத்தில் என் மகன் அசோக், பாபாவை நிமிர்ந்து பார்த்தான். ''நீ என்ன நினைக்கிறாய் என்று எனக்குப் புரிகிறது. 'எப்படி இவற்றை விட முடியும்? விட எண் ணினாலும் இவை நம் கவனத்தை ஈர்க்கின் றனவே? அப்படி விளம்பரங்கள் செய்யப் படுகின்றனவே?' என்று எண்ணுகிறாய். அப்படித்தானே?'' என்று கேட்டுவிட்டு பாபா தொடர்ந்தார்:

''உன் கையில் நீ பிடித்திருப்பது நாகப் பாம்பு என்று உணர்ந்தால் அதைப் படிப் படியாக, சிறிது சிறிதாக நழுவ விடுவாயா? ஒரே வீச்சில் தூக்கி எறிவாய் அல்லவா? அப்படி ஒரே வீச்சில் கெட்ட பழக்கங்களை உதறி எறிந்துவிடு! இல்லையெனில் பாம்பு கடித்துவிடும். விஷம் ஏறிவிட்டால் உன் னைக் காப்பாற்றுவதே கஷ்டமாகி விடும்!

''குடும்பத்தில் பெரியவர்கள், இளைஞர் களுடன் அடிக்கடி பேசி அவர்களை நல் வழிப்படுத்த வேண்டும். புடலங்காய் பிஞ் சாக இருக்கும் போதே, அந்தந்தப் பருவத் துக்கு ஏற்ற எடையில் கல் கட்டி வந்தால் நீண்டு வளரும். முற்றிச் சுருண்ட பிறகு கல் கட்டி அதை நிமிர்த்த முடியாது; உடைந்து தான் போகும்!

''இளைஞர்கள் வளர்த்துக் கொள்ள வேண்டியது பிரேமை. அன்பு இருந்து விட் டால் போதும், மற்றதெல்லாம் சரியாகி விடும். உன் இதயத்தில் அன்பு சுரந்தால் 'நான்' எனும் மமதை விலகும்; மனம் தெளிவு பெறும்; சாந்தி பிறக்கும்; மகிழ்ச்சி பொங்கும். அப்போது உலகத்தையே சந் தோஷ மயமானதாய்க் காண்பாய்! உலகில் ஒரே ஒரு மதம்தான் உண்டு; அது அன்பு மதம் என்பதை உணர்வாய்!''

(ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம்.)

ஆதாரம்: வி. பாலு எழுதிய

**The Glory of Puttaparthi, S. B. Publications, 1, South Cross Road., Bangalore-560 004.**

விலை ரூ. 10.

கவனம்

கவனம்



இராணுவத்
தளவாடங்களில்
கையாடல்
செய்வோரை
ஆதரித்தால்
நாளை
இந்தியாவே
களவு போய்விடும்!





நாட்டைக் காத்திடவும், நாட்டின் கண்ணியம் காத்திடவும்



ஆதரிப்பீர்



உதய சூரியன்

தேர்தல் நாள்: 24-11-89

வெளியிடுபவர் - தி.மு.க., அண்ணா அறிவாலயம், சென்னை.

# வெல்லமே தாராயோ?

5

அகில இந்திய வானொலி நிலையத்தின் வாசலில் தன் சைக்கிளில் இருந்து இறங்கினாள் வந்தனா. சூரிதாரின் துப்பட்டாவைச் சரி செய்து கொண்டு, சைக்கிளில் இருந்து எடுத்து, கைப்பையைத் தோளில் மாட்டிக் கொண்டு, கட்டட வாசலை நோக்கி நடப்பதற்குள், அறிமுகமான ஒன்றிரண்டு பேருக்குக் கைகுவித்தாள். புன்னகை செய்தாள்.

வரவேற்புப் பகுதியில் புத்தகத்தில் கையெழுத்திட்டுவிட்டு, ''மைதிலி நாராயணன் வந்திருக்காங்கதானே?'' என்று விசாரித்துக் கொண்டாள். உள்ளே நீளமான வராந்தாவில் நடந்து, படிகள் ஏறி, ப்ரோக்ராம் எக்ஸிக்யூடிவ் மைதிலி நாராயணனை, அவரது அறையில் சந்தித்தாள்.

மைதிலி நாராயணன் நரைத்த முடிகளைச் சேகரித்து, சிக்கனமாகக் கொண்டை யிட்டு, பான் பீடா மென்று கொண்டே, ஒரு ஸ்கிரிப்டைப் பென்சிலால் எடிட் செய்து கொண்டிருந்தவர், ''வந்தனாவா, அந்தப் பேட்டியை முடிச்சிட்டியா, உக்காரும்மா,'' என்றார்.

எதிர் நாற்காலியில் அமர்ந்த வந்தனா, ''முடிச்சுட்டேன் மேடம். மொத்தம் மூணு பேரைப் பேட்டி கண்டேன். பதினைந்து நிமிஷத்துக்குச் சுருக்கி எடிட் செய்யணும். எடிட்டிங் ரூம் இப்ப ஃப்ரீயா இருந்தால் ஒரு மணி நேரத்திலே முடிச்சுத் தந்துடறேன்,'' என்றாள்.

மைதிலி நாராயணன் எழுந்து சென்று, ஜன்னலுக்கு வெளியில் துப்பிவிட்டு வந்து, போன் எடுத்துப் பேசிவிட்டு, ''இன்னும் அரை மணி நேரத்திலே ஃப்ரீயாயிடுமாம். போய் முடிச்சிடு. அப்புறம் நாளன்னைக்கு ஈவினிங் உனக்கு ஒரு சங்க் போட்டிருக்கேன்,'' என்றாள்.

''தேங்க் யூ மேடம். என்ன டைம்?''

அவர் ஒரு சார்ட் புரட்டிப் பார்த்து விட்டு, ''ஈவினிங் அஞ்சிலேர்ந்து ஆறரை. அஞ்சலியைப் பார்த்தியா?''

''நேத்துப் பார்த்தேன் மேடம்.''

''என்னைப் பத்தி எதுவும் சொன்னாளா?''

''இல்லையே மேடம்.''

''போன வாரம் ஒரு பேட்டியில கோட்டை விட்டுட்டா. கொஞ்சம் காட்டமாவே சத்தம் போட்டுட்டேன். சுதந்திரப் போராட்டத் தியாகி மேலநெறியூர் சுந்தரம் பிள்ளையோட ஒரு நேர்முகம் நிகழ்ச்சி. இவ மூணு தடவை நெறியூருக்குப் பதிலா நரியூர், நரியூருன்னே சொல்றா. அந்த சுந்தரம் பிள்ளையே பொறுக்க முடியாம, மேலநரியூர் இல்லம்மா, மேலநெறியூர்'ன்னு சொல்லிட்டார். நேரடி ஒலிபரப்புல அப்படியே ஏர்ல போய்டுச்சி. அஞ்சலியை வாங்கு வாங்குன்னு வாங்கிட்டேன். அவளுக்குக் கண்ல தண்ணி வந்துடிச்சி. வீட்ல மாமியாரோட சண்டையாம். மூட் அவுட் ஆகி வந்தாளாம். அப்படி இவளை யாரு வரச் சொன்னது? இது பத்திரிகை சமாச்சாரமில்லை, எழுதினதை அடிச்சுட்டு மறுபடி எழுதிக்க. சொந்தப் பிரச்னைகளை எல்லாம் மனசிலேர்ந்து கழட்டி வச்சிட்டு, முழு கவனத்தையும் ஈடுபடுத்த வேண்டிய வேலை இது. என்ன நான் சொல்றது?''

''ஆமாம் மேடம்; பத்திரிகையை விட, தொலைக்காட்சியை விட அதிகமான பேரை போய்ச் சேர்ற மீடியம் இது. அதிகமான கவனம் வேணும்.''

''டோண்ட் ஸ்டாப் தேர் வந்தனா. நீ சொன்ன மத்த ரெண்டு மீடியத்தை விட இன்னும் ரெண்டு விஷயங்களில இது பெட்டர். எப்படின்னு கேளேன்.''

''எப்படி?''

''பத்திரிகையோ, டெலிவிஷனோ போக முடியாத ரிமோட் கிராமங்களுக்கும் நாம் போயிடறோம். அப்புறம் கண்ணை மூடிக்கிட்டு ரிலாக்ஸ் செஞ்சிக்கிட்டே ரேடியோ கேக்கலாம். ப த் தி ரி கை யோ, டெலிவிஷனோ.... கண்ணைத் திறந்தாகணும். இன் எ வே, திஸ் ஈஸ் பிளைண்ட் மென்ஸ் மீடியம்,'' என்று சிரித்து, ஒலித்த போனை எடுத்துக் கொள்ள... அதே சிரிப்பைத் தன் உதடுகளில் பற்ற வைத்துக் கொண்டு,

பட்டுக்கோட்டை பிரபாகர்

வெளிப்பட்டு எடிட்டிங் அறைக்கு நடந்தாள் வந்தனா.

கனமான கதவைத் தள்ளி நுழைந்ததும் குளிர் செய்யப்பட்ட வராந்தாவில் நடக்க, நடக்க ஒலிப்பதிவுக் கூடங்களும், ஒலி பரப்பு அறைகளும் கண்ணாடிச் சுவர் களுக்கு மறுபுறம் எலெக்ட்ரானிக்ஸ் இயந் திரங்களுடன் மௌனமாக இயங்கிக் கொண் டிருந்தன. ஒரு கூடத்தில் கர்நாடக சங்கீதம் பதிவாகிக் கொண்டிருந்தது. மற்றொன்றில் நாடகத்திற்கான ஒத்திகை.

ஓர் ஒலிபரப்பு அறையில் இருந்து இவளை நோக்கிக் கையசைத்தாள், அறிவிப் பாளர் நாற்காலியில் அமர்ந்திருந்த கவிதா. வந்தனா கையசைத்து விட்டு, அவளின் அந்தத் தனியறையின் வாசலுக்கு மேல் சிவப்பு விளக்கு எரியாததால், கண்ணாடிக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே வந் தாள்.

இசைத் தட்டு சுழன்று ஒரு திரைப்படப் பாடல் ஒலிபரப்பாகிக் கொண்டிருப்பதை இவர்களும் கேட்க முடிந்தது. அறிவிப்பாள ரின் மைக்கை கண்ட்ரோல் செய்யும் லீவரை முற்றிலும் ஃபேட் செய்திருந்த கவிதா, "எப்படி இருக்கே வந்தனா, பார்த்து நாளாச்சு," என்றாள்.

"நல்லா இருக்கேன். கல்யாணம் நிச்சய மாகியிருக்குன்னு சொன்னியே... தேதி வச் சாச்சா கவிதா?" என்று வந்தனா ஆர்வ மாகக் கேட்டதும் அவள் முகம் மாறிக் கண்களில் லேசாக நீர்ப்படலம் தோன்றி, "என் சாவுக்குத்தான் தேதி வைக்கணும் வந்தனா. கல்யாணம் நின்னு போச்சு. அது ஒரு சுவாரசியமான கதை. ஒன் மினிட் இரு. பாட்டை மாத்திடறேன்," என்றவள், மற்றொரு ரெக்கார்ட் பிளேயரில் தயாராய் இருந்த இசைத்தட்டின் மேல் ஊசி முனையை வைத்துவிட்டு, ஒலிபரப்பான பாடல் முடிந் ததும் அதன் மைக் சிஸ்டத்தை அணைத்து விட்டு, தனது மைக்கின் லீவரை நகர்த்தி, "அடுத்து நீங்கள் கேட்கப் போகும் பாடல்" என்று படத்தின் பெயர், பாடியவர் கள் பெயர்களைச் சொல்லி இரண்டாவது ப்ளேயரின் மைக்சிஸ்டத்தை ஆன் செய்து, தன் மைக்கை நிறுத்தினாள். இப்போது அடுத்த பாடல் ஒலிபரப்பாகத் துவங்க...



''ஏம்மா, என்ன ஆச்சு?'' என்றாள் வந்தனா.

''ஒரே வார்த்தையில சொல்லணும்னா... வரதட்சணை! விவரமாக் கேட்காதே, வந்தனா. அழுதுடுவேன். இன்னிக்கு உனக்கு டூட்டி போட்டிருக்கா, என்ன சங்க்?''

''இல்லை. ஒரு நிகழ்ச்சி எடிட் பண்ண வந்தேன். ஓய்வா உன்னை உன் வீட்டிலே வந்து பார்க்கிறேன், கவிதா.''

''சரி. மேனன் சாரைப் 'பார்த்தியா இன்னைக்கு?''

''இல்லை. ஏன்?''

''உனக்கு ரெண்டு லெட்டர்ஸ் வந்திருக்கிறதாச் சொன்னார். மைதிலி மேடத்துக் கிட்டே கொடுத்துடுங்கன்னு சொன்னேன்.''

''அவங்களைப் பார்த்துட்டுத்தான் வந்தேன். அவங்க கொடுக்கலையே. நான் மேனன் சாரைப் பார்த்து வாங்கிக்கறேன். கவிதா, எதுக்கும் கலங்காம, ஒடிஞ்சிடாம தைரியமா இரு. விவரமாப் பேசலாம்,'' என்று அவள் தோளில் கை வைத்து, ஆறுதலாகச் சொல்லிவிட்டு, எடிட்டிங் அறைக்கு வந்து, ஒரு நாற்காலியில் அமர்ந்து காத்திருந்தாள்.

விநாடியின் ஒரு துல்லிய பகுதியில்கூட கட் செய்து, இணைக்க முடிகிற அந்த நவீன எலக்ட்ரானிக்ஸ் பிரம்மாண்ட யந்திரத்தின் மேஜையை ஆக்கிரமித்திருந்த இளைஞன், ''இன்னும் பதினைஞ்சு நிமிஷத்துல முடிச்சுடறேன்,'' என்றான்.

நிலையத்தின் நிகழ்ச்சித் தொகுப்புக்களுக்கு வேறு சில பிரத்தியேக அறைகள் உண்டு. வந்தனா போன்ற கேஷுவல் தொகுப்பாளர்களுக்கு, அந்த அறைகளைப் பயன்படுத்த அனுமதி கிடைக்காது. ப்ரோக்ராம் எக்ஸிக்யூட்டிவிடம், தான் தயாரிக்கப் போகிற நிகழ்ச்சி இப்படிப்பட்டது என்று பேசிக் கொண்ட பிறகு செயல்பட்டு, எடிட் செய்து, கேஸட்டைக் கொடுத்தாலும், அது ஏற்கப்பட வேண்டும் என்று கட்டாயமில்லை.

சும்மா அமர்ந்திருக்கப் பிடிக்காமல் வந்தனா மேனன் சாரைப் பார்த்து, தனக்கு வந்த கடிதங்களைப் பெற்று வரத் தீர்மானித்து எழுந்து நடந்தாள்.

'உங்கள் நிகழ்ச்சித் தொகுப்பு அருமையாக இருந்தது — கோழிப் பண்ணை அதிபரை நீங்கள் கேள்வியில் சரியானபடி திணறடித்தீர்கள் — திரைப்படப் பாடலை ஒலிபரப்பும் போது நீங்கள் சொல்லும் ஒரு வரி கமெண்ட் தூள் — உங்கள் குரல் இவ்வளவு இனிமையாக இருக்கிறதே, என்ன சாப்பிடுகிறீர்கள்?' —

— இப்படியாக ஏதாவது எழுதுவதற்கு என்று கார்டும் பேனாவுமாக அலையும் நிறையப் பேருக்கு நேரம் இருக்கிறது. இந்தக் கடிதங்களில் எப்போதாவது சில மணியான கருத்துக்களும், யோசனைகளும் கிடைப்பதுண்டு.

கேரளாவில் ஒரு மெல்லிசைக் குழுவில் பாடும் பாடகி ஒருத்தி, ஒருமுறை வந்தனாவின் உச்சரிப்புகளில் அவளையுமறியாமல் எங்கெங்கே தவறு செய்கிறாள். அதை எப்படித் திருத்திக் கொள்ளலாம் என்று ஒரு கட்டுரை போலவே எழுதியிருந்தது, இவளுக்கு மிகவும் உபயோகமாக இருந்தது.

வந்தனா, மேனன் நாடக ஒத்திகைக் கூடத்தில் இருப்பதாக அறிந்து, அந்தக் கூடத்திற்கு நடந்தபோது எதிர்ப்பட்ட சிறுமி, ''ஆண்ட்டி!'' என்று உற்சாகமாக அழைத்துக் கொண்டே வந்து, இவளைக் கட்டிக் கொண்டாள்.

''ஹலோ சசிகலா!'' என்று அந்த ஐந்து வயது குழந்தையைத் தூக்கி அவள் கன்னத்தில் முத்தமிட்டாள் வந்தனா. ''நாடகமா? குரல் கொடுத்துட்டியா? அப்பா வரலை?'' என்றாள்.

''பணம் வாங்கப் போயிருக்கார். பேசி முடிச்சுட்டேன். சாக்லேட் எங்கே?''

---

## என்.டி.ஆரின் உத்தி...



'விசுவாமித்திரர்' படத்தைப் பாராளுமன்றத் தேர்தலுக்கு முன் வெளியிட்டு விடலாமென்று என். டி. ஆர். கருதியிருந்தார். ஆனால் முன் கூட்டியே தேர்தல்கள் அறிவிக்கப்பட்டு விட்டதால் படப்பிடிப்பில் கவனம் செலுத்த முடியாமல், தேர்தல் வேலைகளில் அவர் தம்முடைய கவனத்தைத் திருப்ப வேண்டியதாகி விட்டது. பார்த்தார், இதுவரை எடுத்த பகுதிகளிலிருந்து முக்கியமான காட்சிகளையும் வசனங்களையும் இணைத்து முந்நூறு மீட்டர் நீளத்துக்கு டிரெய்லராகத் தயாரித்துத் தணிக்கை அதிகாரிகள் அத்தாட்சியுடன் சுமார் 250 பிரிண்ட்டுகள் போட்டு, ஆந்திர மாநிலம் முழுதும் திரையிட ஏற்பாடுகளைச் செய்துவிட்டார். இந்த டிரெய்லரைப் பார்த்தவர்கள், தற்போது டெலிவிஷனில் ஒளிபரப்பாகிக் கொண்டிருக்கும் தாசரியின் 'விசுவாமித்திரர்' இதற்கு முன் நிற்கவே முடியாது என்கிறார்களாம்!

நன்றி: இந்தியன் போஸ்ட்.

தகவல்: அ. குமார்.

என்றாள் சசிகலா, வந்தனாவின் தாவணியைப் பிடித்துக் கொண்டு.

''சாக்லேட், எதுக்கும்மா?''

''பார்த்தீங்களா... மறந்துட்டீங்க. போன தடவை சொன்னீங்களே வாங்கித் தர்றேன்னுட்டு. நீங்க பேட் ஆண்ட்டி'' என்று சிணுங்கினாள், தலையைச் சாய்த்து.

''இல்லடா, வா, இப்ப வாங்கித் தர்றேன்'' என்று அவளைத் தூக்கிக் கொண்டே நடக்க, சசிகலாவின் அப்பா பாபு எதிரே வந்து, ''வணக்கங்க. சசி, கீழே இறங்கு. சின்னக் குழந்தையா நீ?'' என்று அதட்டினார்.

''ம்கூம். ஆண்ட்டி சாக்லேட் வாங்கித் தரப் போறாங்களே...''

''என்ன இதெல்லாம்? வம்பு பண்ணாம இறங்கு.''

''இருக்கட்டும் சார். நான்தான் வாங்கித் தர்றேன்னு சொன்னேன். வாங்க, போகலாம். ரெக்கார்டிங் முடிஞ்சிடுச்சில்லே?'' என்று சசிகலாவை இறக்கி விடாமலேயே வெளியே நடந்தாள் வந்தனா.

அவள் அருகில் தொடர்ந்து நடந்த பாபு, தன் கண்ணாடியைக் கழற்றிக் கைக்குட்டையால் துடைத்துக் கொண்டே பேசினார். ''முடிஞ்சது. ஆனா இனிமே சசிகலாவோட ரேடியோ ப்ரோக்ராம்சைக் கொஞ்சம் கொஞ்சமாக் குறைச்சிக்கலாம்னு பார்க்கிறேன். வேளச்சேரியிலிருந்து வந்து போறது சிரமமா இருக்கு. இங்கே வந்தப்புறம் திடீர்னு ரெக்கார்டிங் கேன்சல்டுன்னு சொல்லிடறாங்க. இவளோட வந்து போறதில என் வேலை கெடுது. சொந்தச் சமையல் வேற. மேடை நாடகத்திலே முன்னே மாதிரி எனக்கு அதிக வாய்ப்புக்கள் கிடைக்கிறதில்லை. சினிமாவுக்கு முயற்சி பண்ணிக்கிட்டிருக்கேன். அதுக்கு நாலு பேரைப் போய்ப் பார்க்கணும். பத்துத் தடவை சலாம் போடணும். சசிகலாவோட அலைஞ்சிட்டிருக்கிறதால அதெல்லாம் முடிய மாட்டேங்குது.''

''சசிகலாவுக்கு வாய்ஸ் நல்லா இருக்கு. மாடுலேஷன் பிரமாதம். இந்த வயசிலேயே அற்புதமான கிரகிக்கிற சக்தி. நல்ல எதிர்காலம் இருக்கு சார். ப்ரோக்ராம் பண்றதை நிறுத்திடாதீங்க ப்ளீஸ்,'' என்ற வந்தனா அந்தக் கடையில் பட்டை சாக்லேட் வாங்கிச் சசிகலாவிடம் கொடுத்ததும், அவள் நன்றி சொல்லி இரண்டு கன்னங்களிலும் முத்தமிட்டு விட்டு இறங்கித் தன் அப்பாவுடன் பஸ் ஸ்டாப்புக்கு, திரும்பிப் பார்த்துக் கையசைத்துக் கொண்டே நடந்தாள்.

வந்தனா மீண்டும் உள்ளே வந்து மேனன் சாரைச் சந்தித்து, தனக்கு வந்த கடிதங்களுடன் எடிட்டிங் அறைக்கு நடந்து கொண்டே, அந்த இன்லண்ட் லெட்டரைப் பிரித்தாள். அதில் —

'என் அருமைக் காதலியே, வந்தனாவே...' என்று கடிதம் துவங்கியிருந்தது.

(தொடரும்)





நீங்கள் கேட்டவை — தராசு



* பலமும் பலவீனமும்.



* ஒரே இலக்கு!

# ராஜீவின் பலம் யார்? பலவீனம் யார்?

* பிட் அடித்தாவது...

* மெய்சிலிர்ப்பு!





ரூ. 20 பரிசு பெறுபவர்:
டி. தாழைபிரபு,
53, பெரியார் நகர்,
குடியாத்தம்.

* கு. சிவகுமார், திருவேங்கடம் மேற்கு.

? ம. பொ. சி. இ. காங்கிரஸில் சேர்ந்திருக்கிறாரே?

! புறப்பட்ட இடத்துக்கே திரும்பி வந்து உலகம் உருண்டை என்று நிரூபித்திருக்கிறார்! தமக்கு ஆசை இல்லை என்று கூறிக் கொண்டே காங்கிரஸுக்குப் பெரிய மீசை கொடுத்திருக்கிறார். பிறகென்ன, ஒரே மெய்சிலிர்ப்புத்தான், போங்கள்!

* கே. வி. நாதன், நெய்வேலி.

? 'சம்பள விகிதங்களை உயர்த்திக் கொடுக்க வேண்டும். இல்லாவிட்டால் பாகிஸ்தான் சென்று விளையாட மாட்டோம்' என்று முரண்டு பிடிக்கும் கிரிக்கெட் வீரர்கள் குறித்து...?

! கிரிக்கெட் கண்ட்ரோல் போர்டு உறுதியாக இருக்கவே, இப்போது விஷயம் 'உல்டா'வாகி விட்டது! கிரிக்கெட் வீரர்களுக்குத் தேசபக்தி ஊற்றெடுத்து, 'நாட்டுக்காக விளையாடப் போகிறோம்' என்று அறிவித்து, 'போர்டு' தந்த அட்வான்ஸ் தொகையைத் திருப்பித் தந்து விட்டனர். இந்த டீம் ஸ்பிரிட்டை ஆட்டத்திலும் காட்டி, வெற்றி வாகை சூடுவார்களா என்பது ஒரு புறமிருக்க, கிரிக்கெட் தவிர இதர விளையாட்டுத் துறைகளில் ஆட்டக்காரர்களின் நிலையைச் சற்று நோக்கினால், தாங்கள் எவ்வளவு அதிர்ஷ்டசாலிகள் என்பதைப் புரிந்து கொள்வார்கள்!

* எம். முத்து, மதுரை — 20.

? மீண்டும் வந்து, களத்தில் அனைவரையும் ஒருமுகப்படுத்தி, சார்ஜா, நேரு கோப்பைகளைத் தட்டிச் சென்ற இம்ரான் பற்றி...?

! வெற்றியில் அடக்கம், அலட்டிக் கொள்ளாத சுபாவம், அநாவசிய அறிக்கைகள் வெளியிட்டுப் பரபரப்பு உண்டாக்காத காப்டன்.

* கடுவை. மகரந்தன், திருவாரூர்.

? சமீபத்தில் நீங்கள் பார்த்த அரசியல் பயங்கரம்?

! பஞ்சாபில் பத்தொன்பது மாணவர்களின் படுகொலை! பயங்கரவாதம் என்பது எப்படிப்பட்ட கோழைத்தனம் என்பதை எடுத்துக்காட்டும் சம்பவம். பயங்கரவாதம் முதலில் பலி கொடுப்பது மனிதத்தன்மையையும் வீரத்தையும்தான் என்று நிரூபிக்கும் நிகழ்ச்சி.

* கே. ஆர். தேவேந்திரன், வேலூர்.

? போஃபோர்ஸ் ஊழல் விஷயத்தில் மகாராஷ்டிர முன்னாள் இ. காங்கிரஸ் முதல்வர் பாபாசாகிப் போஸ்லே ராஜீவுக்கு எதிராகப் போர்க்குரல் எழுப்பியிருப்பது குறித்து...?

! துணிச்சலுக்குப் பாராட்டு.

* ஃபிர்தௌஸ் நஸீர், கோவை.

? 'தமிழ்நாட்டில்தான் தற்கொலைகள் அதிகம்' என்று இந்தியா டுடே கூறியுள்ளதே?

! இதைப் படித்துவிட்டு இன்னும் இரண்டு

தற்கொலைகள் நிகழாமல் இருந்தால் சரி! அது போகட்டும். நாம் பாஸிடிவாகச் சிந்திக்க, இயங்கப் பழகுவோம்.

* டி. தாழைபிரபு, குடியாத்தம்.

? ஜெயலலிதாவின் தேர்தல் பிரசாரம் எப்படி?

! அவருக்குத் தோப்பும் தெரியவில்லை, மரமும் தெரியவில்லை. மரத்தின் கிளையோ, இலைகளோ, அவற்றின் இடையில் தொங்கும் பழமோ எதுவும் தெரியவில்லை. பழத்தின் காம்பு மட்டுமே தெரிய, அதனைக் குறி பார்க்கிறார். அவருக்குக் கருணாநிதிதான் இலக்கு!

* ரெஜினா ஜோஸ்பின், திருபுவனம்.

? ஜெயலலிதா பிரதமரானால் (ஒரு விபரீத ஆசைதான்!) செய்யும் முதல் காரியம் என்னவாக இருக்கும்?

! வேறென்ன, கலைஞர் அமைச்சரவையைக் கலைப்பது என்ற விபரீதம்தான்!

* கே. சின்னய்யா, புதுக்கோட்டை.

? பஞ்சு, பட்டு, பீதாம்பரம் பார்த்தீர்களா?

! காத்தாடியின் ஏக்க அழுகை டிரேட் மார்க்; நகைச்சுவை என்ற பெயரில் அபத்தங்கள். கண்டு, சற்றும் சகிக்காம்பரம்!

* த. சத்தியநாராயணன், அயன்புரம்.

? ராஜீவின் தற்போதைய பலம், யார்? பலவீனம் யார்?

! அமேதியில் வீடு வீடாகச் சென்று, குழந்தைகளுக்கு முத்தம் தந்து, கைச்சின்ன ஸ்டிக்கர் தந்து, குறைகளைத் தேர்தலுக்குப் பின் நிவர்த்திப்பதாகக் கூறி வோட்டுக் கேட்கும் சோனியா — பிரியங்கா டீம், பலம். காந்தியின் கொள்ளுப்பேரன் என்று கூறிக் கொண்டு, ராஜ்மோகனுக்குப் புத்தி கூற முற்பட்டு, ராஜீவுக்கு ஆதரவு காட்ட முன் வந்திருக்கும் யோகேஷ் காந்தி பலவீனம். இவர் மகாத்மா காந்தியின் சகோதரரின் கொள்ளுப்பேரன். அமெரிக்காவில் காந்தி பெயர் கூறிக் கொண்டு பணம் பண்ணி வாழ்பவர். ரேகனுக்கு மகாத்மா விருது அளித்துக் கௌரவித்த இவர், அடுத்து ராஜீவுக்கு மகாத்மா விருது வழங்கக் காத்திருக்கிறார்!

* ஆர். பி. திருஞானம், கொரட்டி.

? நாடு முழுவதும் மத உணர்வுகளைத் தூண்டி விடுவதாக எதிர்க்கட்சிகள் மீது ராஜீவ் குற்றம் சாட்டுகிறாரே?

! அதில் ஓரளவு உண்மை இல்லாமல் போகவில்லை. மத உணர்வுகளை வைத்து அரசியல் பண்ணுவதென்பது நடந்து கொண்டுதான் இருக்கிறது. ஆனால் இந்த விஷயத்தில் ராஜீவும் அவர் தாயும் விதிவிலக்குகள் அல்ல. அவர்களும் இம்முறையைக் கையாண்டு வழி காட்டியவர்கள்தாம். தமது பதவிக் காலத்தில் ஜாதி — மத பேதங்களை ஒழித்து, ஒற்றுமை வளர ராஜீவ் பாஸிடிவாக என்ன செய்திருக்கிறார்? பஞ்சாபும் அயோத்தியும் கூறும் சாட்சியங்கள் அவருக்குச் சாதகமாக இல்லையே!

* ராமு, தாம்பரம்.

? ஜே. வி. பி. தலைவர்கள் மரணம் பற்றி...?

! 'ஒருவரை ஒருவர் தாக்கிக் கொண்டார்கள்; தப்பிஓடப் பார்த்தார்கள்; சுட்டுக் கொல்லப்பட்டார்கள்' என்பதெல்லாம் காதுல பூ போலத்தான் தோன்றுகிறது! நாட்டு நலன் என்பதாகக் கருதி, இலங்கை அரசு ஒரு திட்டமிட்ட சதியை நடத்தியிருப்பதை எதிர்காலம் மெய்ப்பிக்கும். இலங்கை அரசின் 'நாட்டு நலன்' என்ற நோக்கம் நிறைவேறுமானால் இந்தச் சதியை மன்னித்து விடலாம். Calculated risk!



* சகிக்காம்பரம்!



* அலட்டிக் கொள்ளாதவர்!

* சிவராம், சென்னை.

? ராணிகஞ்ச் நிலக்கரி சுரங்கத்தில் சிக்கியுள்ள அறுபத்தாறு தொழிலாளர்கள் பிழைப்பார்களா?

! பிழைப்பார்கள் என்ற நம்பிக்கையுடன் பிரார்த்திப்போம். அதே நேரத்தில் ராணிகஞ்சின் வேறு பல பகுதிகளிலும் நிலப்பரப்பு கீழிறங்க, வீடுகளில் வெடிப்பு ஏற்பட்டு வருவதைக் கவனிக்க வேண்டும். இருபத்தோராம் நூற்றாண்டு நோக்கிச் செல்வதாகக் கூறி ராக்கெட் அனுப்பும் நாம், இன்னும் சுரங்கப் பாதுகாப்பில் கூடப் போதிய தேர்ச்சி பெறாதது வெட்கக் கேடு!

* எஸ். ராமநாதன், திருநெல்வேலி.

? 'தேர்தல் பரீட்சையில் பிட் அடித்தாவது பாஸ் செய்ய வேண்டும்' என்று இளைஞர் அணிக்கு அறிவுரை வழங்கிய ஸ்டாலின் பற்றி?

! தேர்தல் ஜுர உளறல்களில் ஒன்று.

# எதிர்கால இந்தியா உருவாகிறது

**பி**ரேயர் முடிந்து, மாணவர்கள் வகுப்புகளுக்குச் சென்றதும் தம் அறையில் வந்து அமர்ந்தார் தலைமை ஆசிரியர் பரமசிவம். அது ஒரு மேல்நிலைப் பள்ளி. ஏறத்தாழ எழுநூறு மாணவர்களையும் இருபதுக்கு மேற்பட்ட ஆசிரியர்களையும் கொண்ட பெரிய பள்ளிக்கூடம் அது. இத்தனைக்கும் நேற்றே, 'நாளைக்கு இன்ஸ்பெக்ஷனுக்காகப் பள்ளிக்கூடத்துக்கு இன்ஸ்பெக்டர் வரப் போகிறார். எல்லோரும் நாளைக்கு மட்டுமாவது காலத்துல வந்துடுங்க' என்று கூறியிருந்தார்.

எது பற்றியும் கவலைப்படாது பல வருஷப் பழக்கத்தைத் திமிர் என்று மாற்றிக் கொள்ள முடியாத ஆசிரியர்கள், அன்றும் வழக்கம் போலவே கால் மணி, அரை மணி, ஒரு மணி நேரம் என்று தங்களின் வாடிக்கையான நேரத்திற்கே வந்தனர். ஆசிரியர்கள் லேட் என்ற வருத்தத்தை விட 'நல்ல வேளை இன்ஸ்பெக்டர் இன்னும் வரவில்லை' என்று மனத்தைத் தேற்றிக் கொண்டார் பரமசிவம்.

மணி பதினொன்றை நெருங்கிக் கொண்டிருந்தது. இன்னும் நான்கு ஆசிரியர்கள் வரவில்லை.

பியூனைக் கூப்பிட்டு அந்த நாலு பேரும், லீவு லெட்டர் எதுவும் கொடுத்தார்களா என்று கேட்டார்.

"இல்லே ஸார்.. ரெண்டு பேர் ஏ.இ.ஓ. ஆபீஸுக்குப் போயிருக்காங்க. புதிய சம்பள விகிதத்தில அரியர்ஸ் பில் எழுதறாங்க... ஆபீஸில் ஹெட் கிளார்க் லீவாம். அதுதான் ஏ.இ.ஓ. கூப்பிட்டு அனுப்பினார்னு போயிருக்காங்க. வரமாட்டாங்க ஸார்..." என்றான் பொன்னுசாமி.

"சரி... சுந்தரம் சார் என்ன ஆனார்?"

"இயக்க வேலையா வகுலுக்குப் போயிருக்கார் ஸார். அவங்க இயக்கத்துல பே கமிஷன் குறைபாடுகளைக் களையணும்னு ஒரு போராட்டம் நடத்தப் போறாங்களாம். அதுக்கு நோட்டீஸ் அடிச்சு எடுத்துட்டு ஸ்கூல் ஸ்கூலாப் போகணும். 'கேட்டாச் சொல்லு.. மத்தியானம் வந்துடுவேன்'னுட்டு போயிருக்கார்..." என்றான் பொன்னுசாமி.

பல பேர், வாய்மொழி பர்மிஷன் என்றால், இப்படி பியூனிடம் சொல்லி விட்டுப் போவதுதான் அந்தப் பள்ளியின் வழக்கம்!

**மோ**ட்டார் சைக்கிள் சப்தம் கேட்டது.

"சார்.... ராமு சார் வந்துட்டார்" என்றான் பொன்னுசாமி.

மோட்டார் சைக்கிளை ஏற்றுவதற்காக, உட்கார்ந்திருந்த மாணவர்களை எழுப்பி விட்டு, ஒரு தரைப் பலகையை எடுத்துக் கொண்டு போனான் பொன்னுசாமி.

வராந்தாவில் ஏற்றி பைக்கை நிறுத்தி விட்டு, பைக்கிலிருந்த பெட்டியைத் திறந்து, ஹேண்ட் பேக், அன்றைய நான்கைந்து தினசரிகள்... கட்சிப் பத்திரிகைகளை எடுத்துக் கொண்டு, துண்டைச் சரிசெய்து கொண்டு, ராமு சார் உள்ளே வந்தார்.

"இன்றைக்கு மட்டுமாவது கொஞ்சம் காலத்துல...." தலைமை ஆசிரியர் சொல்வதைக் காதில் வாங்கிக் கொள்ளாமல், அட்டெண்டன்ஸ் ரிஜிஸ்தரை எடுத்துக் கையெழுத்துப் போட்டுக் கீழே ஒன்பது பத்து என்று நேரத்தையும் போட்ட போது, பதினொரு மணிக்கான இண்டர்வெல் மணி அடித்தது.

"பத்து மணிக்குள்ளே வந்துடலாம்னு பார்த்தேன். திடீர்னு கட்சிக்காரங்க வந்துட்டாங்க. அடுத்த வாரம் இங்கே எஜுகேஷன் மினிஸ்டர் வர்றார். ஆசிரியர்கள் சார்பா ஒரு வரவேற்புக்கு ஏற்பாடு செய்யணும்னு ஒன்றியச் செயலர் சொன்னார். அது பத்திப் பேசிட்டு இருந்துட்டேன்..." என்றார் ராமு சார்.

'நமக்கேன் வம்பு. ஏதோ இப்போதாவது வந்து சேர்ந்தாரே அதுவே போதும்' என்று பரமசிவம் திருப்திப்பட்டுக் கொண்ட போது, "சார்... இன்ஸ்பெக்டர் வந்துட்டார்..." என்றான் பியூன்.

வாசலுக்கே ஓடி, "வாங்க சார்" என்றார் பரமசிவம்.

இன்ஸ்பெக்டர் வந்து அவர் அறையில் அமர்ந்ததும், "போய் ஸ்ட்ராங்கா ஒரு டீ... ஒரு பாக்கெட் பிஸ்கட் வாங்கிட்டு வந்துடு..." என்று பரமசிவம் பியூனை விரட்டினார்.

"அப்படியே ஒரு பாக்கெட் கோல்டு பிளேக்கும் ஒரு தீப்பெட்டியும் வாங்கிட்டு வரச் சொல்லுங்க..." என்றார்

**கமலா கந்தசாமி**



சாப்பிட்டவர்: இதென்ன ரெண்டு பில் கொடுக்கிறியே, எதுக்குப்பா...?

சர்வர்: ஒண்ணு சாப்பிட்டதுக்கு. இன்னொண்ணு டிப்ஸுக்கு...!

— கரடிகுளம் ஜெயா பாரதிப்ரியா.

இன்ஸ்பெக்டர்.

"சரி சார்..."

"பக்கத்துல ஒரு சத்துணவு மையத்துக்கு விசிட் அடிச்சிட்டு வந்தேன். அதுதான் லேட்டாயிடுச்சு..." என்று தம் காலதாமதத்திற்குக் காரணத்தைச் சொல்லி விட்டு, "ஆமாம்... இந்த ஸ்கூலில் சத்துணவு எப்படி நடக்குது...?" என்றார்.

"சுத்த மோசம் சார். இருநூறு பேர்தான் சாப்பிடறாங்க. நானூறு பேருக்கு அட்டெண்டன்ஸ் போட்டுடறான். சாப்பாடும் சகிக்கலே. முட்டை கொடுக்கறதுலேயும் ஏகப்பட்ட கம்ப்ளைன்ட் சார்..."

'வரட்டும். இவ்வளவு தப்புப் பண்ற பயல் நம்மை இதுவரை தனியா வந்து கவனிக்கவில்லையே' என்ற கோபம் இன்ஸ்பெக்டர் மனத்தில் எழுந்தது.

"சரி. ஸ்கூல் எல்லாம் எப்படியிருக்கு? கிளாஸ்களை ஒரு ரவுண்ட் விசிட் பண்ணிட்டு வரலாமா...?" என்றார்.

அதற்குள் பிஸ்கட், டீ வந்து விடவே, அதனை முடித்து விட்டு, ஒரு சிகரெட்டையும் பற்ற வைத்துக் கொண்டார் இன்ஸ்பெக்டர்.

"அப்படியே வீட்டுக்குப் போய்ப் பெரிய கேரியரை எடுத்துட்டு, முனியாண்டி விலாஸ்ல ஒரு அரை பிளேட் பிரியாணி, ஒரு கறி வறுவல், சாப்பீஸ், அப்புறம் அவித்த முட்டை இரண்டு, மீன் வறுவல், ஒரு பிளேட் எக்ஸ்ட்ரா சாதம், தயிர்... வாங்கிட்டு வந்துடு...." என்று பியூனிடம் மதியச் சாப்பாட்டுக்கு லிஸ்ட் சொன்ன தலைமை ஆசிரியர், "வேறு ஏதும் வேணுமா சார்...?" என்று இன்ஸ்பெக்டரிடம் பவ்வியமாய்க் கேட்டார்.

"வேற ஒண்ணும் வேண்டாம். இரண்டு வாழைப்பழம், வெற்றிலை பாக்கு மட்டும் போதும்... சரி கிளாசுக்குப் போகலாமா...?" என்று இன்ஸ்பெக்டர் எழுந்ததும்,

"போய் என்ன சார் பார்க்கப் போறீங்க? இன்னும் ப்ரீ புக்ஸ் பாதி வந்து சேரலே. ஸ்கூல் திறந்து நாலு மாசம் முடிஞ்சிட்டது. பையன்கள் பையில அலுமினியத் தட்டுத்தான் இருக்குது. ப்ளாக் போர்டுல பெயிண்டே இல்லை. சாக்பீஸ் சப்ளையும் அடியோடு நின்னு போச்சு..."

"என்ன சார் பண்றது? அரசாங்கமும் சத்துணவு... முட்டைன்னு நினைக்குதே தவிர, ஸ்கூலுக்கு பிளாக் போர்டு, மேஜை, நாற்காலி, கட்டடம்னு கவனிக்கறதில்லே. உங்க சங்கத்துலேயும் மத்திய அரசுக்கு இணையாச் சம்பளம்னுதான் போராட்டம் நடத்தறீங்களே தவிர, இது மாதிரி எங்களுக்கு அடிப்படை வசதிகள் செய்து கொடுங்கன்னு போராடறது இல்லே..." என்று இன்ஸ்பெக்டர் சலித்துக் கொண்டார்.

"காலம் கெட்டுப் போயிட்டுது சார். இப்போ பையன்களோட அப்பா வந்தாக் கூட, பையன் படிக்கலேன்னு புகார் பண்றது இல்லே... ஏன் என் பையனுக்கு முட்டை கொடுக்கலேன்னுதான் கேட்டுட்டுப் போறார் சார்..." என்று தலைமை ஆசிரியர் விளக்கம் அளித்தார்.

"கிளாசுக்குப் போகாம இருக்கக் கூடாது. இருபது கிளாசுக்கும் போக வேண்டாம். ஒரு ரெண்டு, மூணு கிளாஸ் பார்க்கலாம்" என்றபடி நடந்தார் இன்ஸ்பெக்டர். தலைமை ஆசிரியரும் உடன் சென்றார்.

இன்ஸ்பெக்டர் மாணவர்களிடம் சில கேள்விகளைக் கேட்டுப் பார்த்தார். ஒரு பையனும் வாயைத் திறந்து பதில் சொல்லவில்லை!

"என்ன சார், பசங்க இவ்வளவு டல்லா இருக்கிறாங்க? எட்டாம் வகுப்புப் படிக்கறவனுக்குத் தமிழ் படிக்க வரலே..." என்று சலித்துக் கொண்டே திரும்பி வந்து தலைமை ஆசிரியர் அறையில் அமர்ந்து மறுபடியும் ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டார் இன்ஸ்பெக்டர்.

"என்ன சார் பண்றது? ஏதோ வசதியானவங்க தங்கள் பிள்ளைகளை டவுனுக்கு அனுப்பிடறாங்க. ஏழைங்கதான் எங்ககிட்டே மாட்டிக்கிறாங்க. செலபஸ் அதிகம். ஆறு — ஏழு — எட்டு வகுப்புகளில் இருக்கிற அறிவியல், கணிதம்... எங்க ஆசிரியர்களில் பலருக்கே தெரியாது சார். ஏதோ குப்பை கொட்டறோம்..." என்று தலைமையாசிரியர் யதார்த்தமாக உண்மை பேசியது, இன்ஸ்பெக்டருக்கும் சரி என்றே பட்டது.

"ஏதோ அரசும் இத்தனை பேருக்கு வேலை கொடுத்திருக்கோம். இத்தனை ஸ்கூல் திறந்திருக்கோம்னு புள்ளி விவரம் தருதே தவிர, எத்தனை பேருக்குத் தரமான கல்வி அளிக்கிறோம்னு நினைச்சுப் பார்க்கறதில்லே. பெற்றோர்களும் குழந்தைகள் ஏதோ பத்து வயசு வரை பள்ளிக்கூடம் போய், இலவசத் துணி வாங்கி... சோறு தின்னு விட்டு வந்தால் போதும்னு நினைக்கிறாங்க. ஆசிரியர்களுக்கோ சதா சம்பளம், அரியர்ஸ், பி.எப். லோன், சொஸைட்டி லோன்.. போனஸ் கிடைக்காத குறை... இரண்டு ஆசிரியர் சந்திச்சுப் பாட விஷயமாகப் பேசிக்கிட்டதைப் பார்த்தே

இல்லை...'' என்று தலைமையாசிரியர் தொடர்ந்து சொல்ல இன்ஸ்பெக்டர் சாப்பிட உட்கார்ந்தார்.

**''என்ன** சார்... சாப்பாடு எல்லாம் சரியா இருந்துதா. வேறு ஏதும் வேண்டுமா?'' என்றபடி ராமு சார் உள்ளே வந்தார்.

''பிரமாதம்...'' என்றார் இன்ஸ்பெக்டர்.

''இந்த ஆண்டுக்கான நல்லாசிரியர் விருதுக்கு செலக்ட் பண்ணி எழுதி அனுப்பிட்டீங்களா சார்... எஜுகேஷன் மினிஸ்டர் கூட அடுத்த வாரம் இங்கே வ ந்கிறார். எல்லா ஏற்பாடும் நான்தான். எங்க வீட்லதான் சாப்பாடு. ஒரு நாள் முழுக்கத் தங்கியிருக்கார்...'' என்று தம் அரசியல் பெருமையை — செல்வாக்கை இன்ஸ்பெக்டருக்குப் புரிய வைக்கும் விதத்தில் பேசிய ராமு சாரின் மனத்தையும் அந்தப் பேச்சில் இருந்து புரிந்து கொண்டார் இன்ஸ்பெக்டர்.

''நான் உங்கள் பெயரை டி.இ.ஓ. ஆபீசுக்கு ஸ்ட்ராங்கா ரெக்கமண்ட் பண்ணிடறேன். அநேகமாக நம்ம யூனியனுக்கு இந்த வருஷம் ஒரு விருது கிடைக்கும். அதுக்குப் பதிலா, எனக்கு எனது சொந்த யூனியனுக்கு ட்ரான்ஸ்பருக்கு ஏற்பாடு பண்ண முடியுமா...?'' என்று இன்ஸ்பெக்டர் கேட்டதும்...

''இது என்ன சார் பெரிய வேலை... அடுத்த வாரம் நீங்க உங்க ஊர்ல ஜாய்ன் பண்றீங்க...!'' என்றார் ராமு சார்.

'அப்பாடா... எத்தனை வருஷம் பெண்டாட்டி பிள்ளைகளைப் பிரிந்து ஹோட்டலில் சாப்பிட்டுக் 'கொண்டு...' — ஒரு கவலை தீர்ந்த திருப்தியுடன் கை அலம்பினார் இன்ஸ்பெக்டர்.

இன்ஸ்பெக்ஷன் நோட்டை எடுத்து, அவர் முன்பு வைத்தார் ஹெட்மாஸ்டர். பேனாவைத் திறந்து மளமளவென்று வழக்கம் போல் எழுத ஆரம்பித்தார் இன்ஸ்பெக்டர்.

''இன்று இந்த நடுநிலைப் பள்ளி ஆய்வு செய்யப்பட்டது. பார்வையின் போது, பள்ளி நடைமுறையில் இருந்தது. ஆசிரியர்கள் அனைவரும் ஆஜர். கல்வித்தரம் சிறப்பாக இருப்பது பாராட்டுக்குரியது. ஆசிரியர்கள் அனைவரும் ஆர்வத்துடன் பணி செய்வது மிகச் சிறந்த விஷயம்...'' என்ற வகையில் நான்கைந்து பக்கம் நீண்டது குறிப்பு.

எழுதி முடித்து விட்டு, ''வரட்டுமா!'' என்று எழுந்தார் இன்ஸ்பெக்டர்.

வாசல் வரை வந்து வழியனுப்பினார் தலைமையாசிரியர். ராமு சாரும் ''மறந்துடாதீங்க சார்...'' என்று வாசலுக்கு வந்து நினைவுபடுத்தினார்.

''நீங்களும் மறந்துடாதீங்க...'' என்று தம் ட்ரான்ஸ்ஃபர் விஷயமாகச் சிரிப்புக்கிடையில் நினைவுபடுத்தி விட்டு ஜீப்பில் ஏறினார் இன்ஸ்பெக்டர்.

# ஏழாவது இரவு

கதை: அபர்ணா நாயுடு

சித்திரம்:

5

விறுவிறுவென்று நடந்தாள் அந்தப் பெண். ஈடுகொடுத்து உடன் சென்ற ரஞ்சனாவுக்குத் தான் அவளுடன் ஓடுவதைப் போன்ற உணர்வு எழுந்தது. சன்னமாக மூச்சு வாங்கியது.

சாலையை அடைந்ததும் நின்றார்கள்.

எதிர்பார்த்திருந்ததைவிட வேகமாகச் சந்திப்புகள் நிகழ்வதைப் போல ரஞ்சனாவுக்குத் தோன்றியது.

முதலில் ரமேஷ். அடுத்தது இவள். இரண்டுமே தற்செயல் நிகழ்ச்சிகள்தான். என்றாலும், பின்னணியில் இருந்து கொண்டு யாரோ இயக்கி வைப்பதைப் போல அல்லவா அவை தொடர்ச்சியாக நடைபெற்றுள்ளன!

அவள் வருவதை முன்னுணர்ந்து, அவள் திட்டங்களை யூகித்துணர்ந்து, அவற்றைத் தடைப்படுத்தும் நோக்கத்தோடு யாரோ செயல்படுகிறார்களா? அல்லது... அல்லது...

அவள் யோசனைகளை வெட்டியவாறு அந்தப் பெண் பேசினாள்.




அப்படியா!

ஆமாம். தற்செயலா இங்கே வந்தப்போ ரமேஷோட உன்னைப் பார்த்தேன். உடனே யாருன்னு புரிஞ்சுக் கிட்டேன்.

அவனைப் போலவே இவளும் ரொம்பவும் சுலபமாகப் பழகுகிறாள். இருவரும் இயல்பாகத் தான் அப்படி நடந்து கொள்கிறார்களா? அல்லது... இதன் பின்னணியில்...



ஆட்டோவை நிறுத்தி ஏறினார்கள்.

பயணம் முழுவதும் இருவரும் எதுவும் பேசிக் கொள்ளவில்லை. மாலினியைத் திரும்பிப் பார்த்தாள் ரஞ்சனா. ஏதோ யோசனையில் ஆழ்ந்து விட்டவளைப் போலத் தெரிந்தாள்.

அந்த எண்ணம் மறுபடியும் ரஞ்சனாவினுள் படர்ந்தது.

இவர்கள் மிகவும் லகுவாக நடந்து கொள்கிறார்கள். வசுமதியின் மரணம் இவர்களுள் எந்தவிதப் பதற்றத்தையும் தோற்றுவிக்கவில்லை. ஏதோ ஒரு நோக்கத்தைத் தேக்கி வைத்துக் கொண்டு, அதை அடையும் திட்டத்துக்கேற்ப, நிதானத்தோடு நடந்து கொள்வதைப் போலவே தோன்றுகிறது. அது என்ன...? பெண்ணே, எச்சரிக்கையாக இரு...'

சிந்தனையிலிருந்து விடுபட்ட போது ஆட்டோ நின்றிருந்தது.

இறங்கி அந்த வீட்டினுள் சென்றார்கள்.













சொல்லிவிட்டு மாலினி உள்ளே சென்றாள்.

சாய்ந்து உட்கார்ந்தாள் ரஞ்சனா. யோசித்தாள்.

நேரில் அவனுடன் உரிமையோடு பேசிய மாலினி, இப்போது ஏன் இப்படிச் சொல்கிறாள்?

யோசித்தபடியே ஜன்னலை நோக்கிப் பார்வையைத் திருப்பினாள். கண்கள் நிலைகுத்தின. ஜன்னலில் —

துப்பாக்கி ஏந்திய கை ஒன்று தெரிந்தது.

அந்தத் துப்பாக்கி அவள் நெஞ்சை நோக்கி இருந்தது.

''ஐயோ!''

நெஞ்சு படபடக்க, அதிர்ச்சியோடு கூவினாள்.

கூச்சல் வெளிப்பட்ட நொடியிலேயே துப்பாக்கியும் கையும் மறைய, விருட்டென்று எழுந்து ஜன்னலை நோக்கி ஓடினாள். அதனையடைந்து வெளியே பார்த்த போது —

தொலைவில் ஒருவன் ஓடிக் கொண்டிருந்தான்.

— தொடரும்

# பாசமழை



அடிதடி மசாலா அதிகம் வீசாத சைவமான குடும்பச் சித்திரம். அனாதையாய்க் கண்டெடுத்து உயிருக்குயிராய் வளர்ந்து வரும் அந்தக் குழந்தை அவளுடைய கணவனால் கற்பழிக்கப்பட்டவளுக்குப் பிறந்தது! கதை வளர இந்தக் கருதான் உதவியிருக்கிறது.

ஆரம்பத்தில் வரும் அல்ட்ரா மாடர்ன் டிரெஸ் ராதிகா அசத்துகிறார். கிராமத்து மணமாய்த் தோன்றும்போதும் சாந்த பாந்தமாய் அவர் பணிவதும், கொப்புளிக்காமல் கொதித்து முறைப்பதும் சுகம். அந்த மனம் விட்ட அழுகை, குழந்தையிடம் கொட்டும் பாசம் — ராதிகாவின் தனி முத்திரைகள்.

முந்தானை முடிச்சில் துவங்கிய அந்தத் தாம்பத்தியப் பிணக்கு ஊர்வசியிடம் அப்படியே ஊன்றியிருக்கிறது. கோவிலில் தற்செயலாய் ராதிகாவின் கதையைக் கேட்டுக் கொண்டு வரும்போதே தான் வளர்க்கும் குழந்தைக்குத் தாய் அவர்தான் என்பதை உணர, முகத்தில் பரவும் திகில், தப்பியோடும் வேகத்தில் குழந்தையை இழுக்கத் துணியாத பதற்றம், உள்ளபடி பாசமழை பொழிகிறவர் அவர்தான்!

மோகன் மெய்யான காதலோடு நல்லதே செய்தாலும் சந்தர்ப்பம் அவரை வில்லனாக்கிக் காட்டுகிறதாம். இருக்கட்டும். கோவிலில் தீபச்சுடர் பட்டு, புடைவையில் தீப்பிடிக்க இவர் அதைத் தொட்டு அணைக்க, தன் புடைவையைப்பற்றி இழுத்த தாய் ராதிகா கேவலப்படுத்தி விட்டுப் போகிறாராம். தான் நிரபராதி என்பதைக் கருகிய முந்தானை முனையைக் காட்டி நிருபிக்கக் கூடவா ஒரு வக்கீலுக்கு வக்கில்லாமல் போய்விடும்! அதற்காகப் பேட்டை ரெளடி மாதிரி வீட்டில் புகுந்து வெறிதீர ரேப் பண்ணிவிட்டுப் போவதா? என்ன இழவோ? ஏற்றுக் கொள்கிற மாதிரி இல்லையே!

சந்திரசேகர் ரெளடிகளுக்குள்ளே சொக்கத்தங்கமாம். பிக் பாக்கெட் அடிப்பார், எத்து வேலை செய்வார், எக்கச்சக்கமாய்க் குடிப்பார், அடியாள் வேலையும் பார்ப்பார், அடிக்கடி ஜெயிலுக்குப் போய் வருவார். பொம்பிளைகளை மட்டும் அசல் தாய்க் குலமாய் மதிப்பார். அதற்காக அவருக்குக் கோவில் கட்டிக் கும்பிடவா? கதாசிரியருக்கே வெளிச்சம்!

கலைஞர் வசனங்களில் இலக்கிய நயங்கள் குதிபோடா விட்டால்தான் அதிசயம். திரைப்படங்களுக்கும் நமக்கும் இருக்க வேண்டிய நியாயமான நேயத்துக்கு அந்த மாதிரி வசனங்கள் தடுப்புச் சுவர் என்கிற உண்மை எப்போதுதான் உறைக்கப் போகிறதோ!

முதல்வர் பெண்களுக்காக அளித்திருக்கும் சலுகைகளை முகவுரையில் பட்டியல் போட்டுக் காட்டி, 'இந்தப் படத்தைப் பார்த்தால் அந்தச் சலுகைகள் ஏன் என்பது புரியும்,' என்கிற மாதிரி சொல்கிறார். இரண்டுக்கும் தொடர்பு இருப்பதாய்ச் சத்தியமாய்த் தெரியவில்லை.

பாசமழையும் பருவமழை போலத்தான் — எதிர்பார்த்த அளவு இல்லை.

— பி. எஸ். எஸ்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: பி. ராஜேந்திரன்.

முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.

ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.

PONDS

பொன் நகைகள்
மின்னிட... சந்தன
நறுமணம் கமழ்ந்திட...

இனிய உணர்வுகள் மனதில்
மலர்ந்திடும் கணங்கள். உங்கள்
மேனியில் பொன் நகைகள்
மின்னிட, தூய சந்தனத்தின்
நறுமணம் கமழ்ந்திட இதுவரை
அனுபவித்தறியா உணர்வுகளால்
உள்ளம் பூரிக்கிறது; பெண்மை
உங்களிடம் பூரண பொலிவு
பெறுகிறது.

அரிய நறுமணம்.
மதிப்பில் பொன்னைப்
போல் உயர்ந்தது.




# பாண்ட்ஸ் சாண்டல் டால்க்

HTA 7023

REGISTERED NO. M. 4392

Registered as Newspaper in Srilanka